உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.




| தொகுதி | அக்ஷய ௵ வைகாசி ௴ ௧௳ | பகுதி |
|---|---|---|
| 11 | 1926 ௵ மே ௴ 14௳ | 11 |


## கடவுள் வணக்கம்.

எத்தனை விதங்கடான் கற்கினுங் கேட்கினுமென்
இதயமு மொடுங்க வில்லை
யானெனு மகந்தைதா னெவ்வளவு மாறவிலை
யாதினும் மபிமானமென்
சித்தமிசை குடிகொண்ட தீகையொ டிராக்கமென்
சென்மத்து நானறிகிலேன்
சீலமொடு தவவிரத மொருகனவி லாயினுந்
தெரிசனஞ் செய்து மறியேன்
பொய்த்தமொழி யல்லான் மருந்துக்கு மெய்ம்மொழி
புகன்றிடேன் பிறர் கேட்கவே
போதிப்ப தல்லாது சும்மா விருந்தருள்
பொருந்திடாப் பேதை நானே
அத்தனை குணக்கேடர் கண்டதாக் கேட்டதா
வவனிமிசை யுண்டோ சொலாய்
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மான பரமே. (1)

ஏதுக்குச் சும்மா விருமனமே யென்றுனக்குப்
போதித்த வுண்மையெங்கே போகவிட்டாய்—வாதுக்கு
வந்தெதிர்த்த மல்லரைப்போல் வாதாடி னையேயுன்
புந்தியென்ன போதமென்ன போ. (2)

கற்கண்டோ தேனோ கனிரசமோ பாலோவென்
சொற்கண்டா தேதெனநான் சொல்லுவேன்—விற்கண்ட
வான மதிகாண மௌனிமவு னத்தளித்த
தானமதி லூறுமமிர் தம். (3)

## அரும்பொருள் விளக்கம்.

1. இம்மைக்கும் மறுமைக்கும் வேண்டிய சுகவாழ்வை மக்களுக்கு அளிக்கவல்லது கல்வி. இக்கல்விச் செல்வத்திற்கு எக்காலத்திலும் எத்தகைய பழுதும் கிடையாது. இது பெற்றவரே கண்பெற்றவராவர். கல்வியால்தான் அவிவேகம் நீங்கவேண்டும்; அவிவேகம் நீங்கின் உலக இயல்பை அறிந்தொழுகும் உபாயம் கைகூடும்; அதனால் தத்துவமார்க்கஞ் சித்திக்கும்; அது சித்திக்கவே இந்த உலகில் புகழை நிலைபெறச் செய்து, முடிவில் முத்தியின்பம் அடையலாம்.

இதுபோலவே, கல்விகற்கும் பாக்கியம் இல்லாதவர், "கற்றில னாயினுங் கேட்க, அஃதொருவற்கு ஒற்கத்தின் (தரித்திர காலத்தில்) ஊற்றாம் (ஊன்றுகோலாம்) துணை" என்கிறபடி, தக்கவரிடஞ் சென்று அறியவேண்டியவைகளைக் கேள்வி மூலமாக அறிந்து சுகம்பெறலாம்.

"எம்மை புலகத்தும் யாம்காணேம் கல்விபோல்
மம்மர் (துன்பம்) அறுக்கும் மருந்து"

என்பது கற்றலின் சிறப்பையும்,

"கற்றலிற் கேட்டலே நன்று"

என்பது கேள்வியின் சிறப்பையும் தெரிவிக்கின்றன.

இப்படி "கல்வியும்கேள்வியும், மனவடக்கத்திற்கும், தற்போத நிவர்த்திக்கும், அபிமானம் விடுகைக்கும், ஈவிரக்கம், தவவிரதம், மெய்ம்மொழி வழங்கல் என்பவற்றைக் கொள்ளுவதற்கும் ஆதாரமாயிருந்தும், பலவிதத்தாலும் என்பால் இவை பயன்படாமற்போயினமையால், என்னைப்போன்ற குணவீனரும் உலகிலுண்டோ?" என்று இப்பாடலில் ஆசிரியர் வருந்துகின்றார்.

"கெடுக்க வல்லதும் கெட்டவர் தங்களை
எடுக்க வல்லதும் இம்மனம் என்றதை
அடக்க வல்லவன் ஐய! பவக்கடல்
கடக்க வல்லவன் ஆகுங் கடிதரோ"

என்று பிரபுலிங்க லீலை கூறுவதால், மனமே ஒருவரை நல்வழியிற் செலுத்துவதற்கும் துர்வழியிற் செலுத்துவதற்கும் காரணமாகின்றது என்பது வெளிப்படை. இந்த மனதை அடக்கியாளவல்லவர் பிறவிப் பெருங்கடலைக் கடப்பதற்கான மரக்கலத்தைப் பெற்றவராவார்; ஆனால் அடக்கும் மார்க்கமும் மிகவும் அருமையாகவே யிருக்கின்றது. இவ்வருமையை,

"நின்னை யறப்பெறு கிற்கிலேன் என்னெஞ்சே
பின்னையான் யாரைப் பெறுகிற்பேன்—நின்னை
அறப்பெறு கிற்பேனேற் பெற்றேன்மற் றீண்டே
துறக்கம் திறப்பதோர் தாள்"

(அறப்பெறுகிற்கிலேன்=முழுதும் வசப்படுத்த முடியாதவனு யிருக்கின்றேன். ஈண்டே=இப்போதே. துறக்கம்=முத்திபுலகம். தாள்=தாழ்ப்பாள்.) என்றும்,

"உள்ளூர் இருந்தூர்தம் உள்ளம்அறப் பெற்றாரேல்
கள்அவிழ் சோலையாம் காட்டுள்ளார்—காட்டுள்ளும்
உள்ளம் அறப்பெறு கல்லாரேல் நாட்டுள்ளும்
நண்ணி நடுவூர் உளார்"

என்றும் அறநெறிச் சாரமும்,

"சிந்தையை யடக்கியே சும்மா விருக்கின்ற திறமரிது"

"சொல்லர்ன திற்சற்றும் வாராத பிள்ளையைத்
தொட்டில்வைத் தாட்டி யாட்டித்
தொடையினைக் கின்னல்போல் சங்கற்ப மொன்றில்
தொடுக்கும் தொடுத்தழிக்கும்
பொல்லாத வாதனை யெனும் சப்த பூமியிடை
போர்துதலை சுற்றியாடும்
புருஷனில் அடங்காத பூவைபோல் தானே
புறம்போந்து சஞ்சரிக்கும்
கல்லோ டிரும்புக்கும் மிகவன்மை காட்டிடும்
காணாது கேட்டவெல்லாம்
கண்டதாக் காட்டியே யணுவாய்ச் சுருக்கிடும்
கபடநா டக சாலமோ
எல்லாமும் வலதிந்த மனமாயை யேழையாம்
என்னால் அடக்க வசமோ!"

என்று இந்நூலாசிரியரும், இவ்வாறே பிறரும் கூறியுள்ள அநுபவமொழிகளால் அறியலாகும்.

தம் வழி வாராத மனமானது கல்விச் செருக்கை அடிக்கடி தூண்டுவதால் அகங்காரம் தலையெடுக்கின்றது. அதனால் மருந்துக்கும் மெய் பேசாது பொய்யை வளர்க்க நேரிடுகின்றது. ஆகவே கற்றதும் கேட்டதும் பிறர்க்கு உபதேசிக்கவே யன்றித் தமது நன்மைக்கல்லவென்பார் 'பிறர் கேட்கவே போதிப்பதல்லாது......பேதை நானே' என்றார்.

"மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே"என்று இவரே மற்றோரிடத்தில் சொல்லுகிறபடி தாம் செய்யப்புகுந்த போதனைப் பிரசங்கத்தை எண்ணித் தம்மையே நொந்துகொள்கிறார். "மௌனம் கலகநாஸ்தி" என்கிறபடி, சும்மா இருந்து இறைவனுடைய திருவருளுக்குப் பாத்திரராகும் பாக்கியத்தைப் பெறவில்லையே யென்று வருந்துகிறார்.

அகந்தை=அகங்காரம்.
சீலம்=ஆசாரம்.

அவனி=பூமி.
அண்டபகிரண்டம்=இந்த அண்டமும் இதன் புறத்துள்ள அண்டமும்.

2. மனம், வாக்கு, காயம் என்னும் திரிகரணங்களாலும் பிரபஞ்சமுகமாக வுண்டாகும் செயல்களற்று அந்தர்முகமாக விருந்து இறைவனைத் தியானிக்கும் மௌன நிலையே எல்லா நிலைகளைக் காட்டிலும் உன்னத நிலையென்று இப்பாடலிற் கூறுகிறார்.

புந்தி=புத்தி.
போதம்=ஞானம்.

3. மூலாதாரத்தில் கீழ்நோக்கிய முகமாய்க் கண்களை முகிழ்த்துக் குண்டலிசத்தியினைக் கும்பித்த பிராணவாயுவால் அக்கினிமண்டலத்தினை மூட்டி யெழுப்பி மூலாதாரமுதல் ஆக்கினை யீறாக ஆறாதாரங்களிடத்தும் சென்றால் சந்திரமண்டலத்தினின்றும் அமுதப் பிரவாகம் சிந்த அதனை யுட்கொண்டு வீற்றிருப்பர் யோகிகள். அத்தகைய தன்மையை யான் அனுபவிக்கும்படி வைத்தனர் எனது மௌனகுரு என்று இதில் கூறுகிறார்.

சொற்கு=சொல்லுக்கு.
அண்டாது=எட்டாது.
வில்கண்ட=பிரகாசம்பொருந்திய.
வானமதி=உயர்ந்த சந்திர மண்டலம்.
ஊறும்=சுரக்கின்ற.

---

# ஆனந்தபோதினி

அக்ஷய௵ வைகாசி௴ கஉ

## பெரியோர்?

கல்வி கேள்விகளாலாகிய நுண்ணுர்வு, அடக்கம், அன்பு, அருள், பரோபகாரம், மனோதிடம், சாந்தம், இனியவைமொழிதல், பிழை பொறுத்தல், தீங்கிழைத்தவர்க்கும் நலம் புரிதல், சுய நலத்தினும் பொதுநலத்துற்சாகம், உலகநடை யறிதல் முதலிய சற்குணங்கள் நிலைக்கப்பெற்று, அவ்வுத்தம குணங்களைத் தமது நித்திய ஒழுக்கத்தில் புலப்படுத்த வல்லவரே, பெரியோரென்னும் பத

விக்கு உரியோராவர். அவர்தம் பெருமை அளவு கடந்தது. அதிவிருஷ்டி (பெருமழை), அனுவிருஷ்டி (மழை பெய்யாமை), பெருங்காற்று, பெருநெருப்பு, பெரும்பிணி என்னும் தெய்வச்செயல்களால் நேரக்கூடிய துன்பத்தையும், பகைவர், கள்வர், சுற்றத்தார், ஏவலாளர் என்னும் மக்களால் நேரக்கூடிய பொல்லாங்கையும் முன்னதாகவே அறிந்து, அவை நேராதபடி அவற்றைத் தடுக்கத்தக்க சாமார்த்தியம் வாய்ந்தவர் அவரே. தெய்வச் செயலால் வருந் தீங்கை உற்பாதங்களாலுணர்ந்து தெய்வங்களையும் தக்கவர்களையும் நோக்கிச் செய்யும் சாந்திகளாலும், மக்களால் வரும் துன்பை அன்னோரது குணம், குறி, ஆகாரம் (குறிப்பின்றி நிகழும் வேறுபாடு), செயல் என்பவற்றாலுணர்ந்து, சாம, பேத, தான, தண்டம் என்கிற சதுர்வித உபாயங்களாலும் மாற்றுதற்கான ஆற்றல் பெரியோரிடமே குடிகொண்டிருக்கிறது. உயர்வு தாழ்வு, விருப்பு வெறுப்பு முதலிய உடன்பாடு எதிர்மறை இரண்டும் அவர்க்கு ஒன்றேயாம். வினைப்பயனால் உண்டாகும் சுகதுக்கங்களை அவர்கள் பொருட்படுத்துவதில்லை.

செல்வமுடையவர்க்குக் கள்வராலும், அரசர்க்குப் பகைவராலும், பிராணன்மீது நோக்கமுள்ளவர்க்கு எமனாலும் விளையக்கூடிய பயம் எப்போதுமுண்டு. இத்தகைய பயம் பெரியோரிடம் இல்லவே இல்லை. மற்றும், மனவிரக்கம் அவர்கள்பால் மிகுதியும் உண்டு. அது வஞ்சகரிடத்து மிருக்கின்றதே என்றாலும், வஞ்சகரிடத்திலுள்ள இரக்கம் மாதர்களைக் காதலிக்கும் போதுண்டாவது; பெரியோர்களுடையதோ பகவானுடைய அருட்கண்ணோக்கத்தைச் சார்ந்ததாம்.

அன்றியும், யௌவனத்தால் நிகழ்தற்பாலனவாய இடையூறுகளை எளிதிற் கடக்குந் திறத்தைப் பெற்றவரே புருஷர். அவர்களே யாவரும் வணங்கத்தக்க பெரியோர். இப்பெரியோர் குடும்ப வியாபாரத்தில் கட்டுண்டிருக்கும்போது கிடைத்தவை யெவையோ அவற்றைத் திருப்திகரத்துடன் புசித்து வருவர்; கிடையாத பொருட்கு வருத்தப்படுவதில்லை. இது அவர்களது சுபாவிகம். எத்தன்மையான இடுக்கண் நேர்ந்தாலும் அவர்கள் தங்களுடைய நற்குணத்தைக் கைவிட மாட்டார்கள். அவர்களுடைய வாய்ச் சொல்லைக் கேட்கக் கேட்கக் கொதிப்புள்ள மனமுங் குளிர்ச்சியடையும்.

உலகத்திற் காணப்படும் வஸ்துக்கள் பலவற்றிலும் பூமி, கடல்,

மலை என்பவை பெரியவை. இம் மூன்றினும் * பெரியவையோ, முறையே காலத்திற்செய்த சிறு நன்றி, பிரதிபலனை எதிர் நோக்காத உதவி, மேற்கொண்ட நெறியினின்றும் பிறழாது அடங்கும் உயர்வு என்பனவாம். இப்பெருங்குணங்களைத் தம்மிடம் நடைபெறக் கொண்டிருத்தலால், பெரியோர் இவற்றினும் பெரியோராவர்.

ஆபத்தான காலத்தில் செய்யப்பட்ட நன்மை அணுவாயினும், காலத்தை நோக்க அது மகத்தாகத் தோன்றுதலால், அதன் அளவு பூமியின் அளவிற்கும் மேற்பட்டதென்று கூறப்பட்டது. இவ்வுண்மையை யுணருந்தன்மை பெரியோர்க்கே யுண்டு.

"தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்றெரி வார்."

என்று தமிழ்மறை பறை யறைகின்றது.

அல்லாமலும் பூமியின் விசேஷகுணம் பொறுமை. தன்னைத் தோண்டுதல், மிதித்தல், அசுத்தப்படுத்தல் என்னுந் தொழிலைத் தனக்குச் செய்கின்ற மக்களிடத்தும் தான் பொறுமை பாராட்டி அவர்களை வீழாதபடி தாங்கி நிற்கின்றது. அவ்வண்ணமே பெரியோர் தமக்குக் கேடு நாடினார்க்கும் பொறுமையோடிருந்து நன்மை புரிவர். அதனால் சேதனரான அவர் பெரிதாகிய அசேதன பூமியியினும் பெரியராவர்.

பின்னரும் அவர், எவ்வாறு சமுத்திரமானது போராழங்கொண்டு கரையின்றியே கரையுள்ளதுபோலக் கட்டுப்பட்டிருக்கின்றதோ, அவ்வாறு சகலவல்லமை பெற்றிருந்தும் சாதாரண மக்களைப் போன்றே அம்மக்களுடன் கலந்திருந்து வேண்டும் நன்மைகளைச் செய்து வருவர்.

---

* "காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது."

"பயன்றூக்கார் செய்த வுதவி நயன்றூக்கின்
நன்மை கடலிற் பெரிது."

"நிலையில் திரியா(து) அடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிது."

என்னுங் குறள்கள் கண்டறியத்தக்கன.

இதனால் அவர் கடலினும் பெரியராவர். இன்னும் அவர், மலை எவ்விதம் கலங்காது நின்று கம்பீரமான தோற்றத்துடன் விளங்குகின்றதோ அவ்விதமே உலகவியலுக் கசையாமலும் தமது நிலையிற் றளராமலுமிருந்து தானாகவே உண்டாகும் புகழ்க்குரிய காட்சியுடன் சஞ்சரிப்பர். தனக்குதவி நாடாது பிறர்க்குதவி செய்தலையே மேகம் விரும்புவதுபோலப் பெரியோரும் தமது நலனைக் கவனியாமல் பிறர் நலனைப் போற்றுவதிலேயே கருத்தாயிருப்பர். பகவானுடைய திருமேனியின் அமைப்பையும், பத்துத்திசைகளையும், ஐம்பெரும் பூதங்களின் தன்மையையும், அறிவின் மாட்சியையும், பேசும் பேச்சின் திறத்தையும், சமயங்களின் பிணக்கையும் அளவு படுத்தல் அசாத்தியமானது போல, பெரியோரின் மகத்துவத்தையும் முடிவிட்டுப் பேச எவராலும் முடியாது.

இப்படிப்பட்டவரான பெரியோருடைய இணக்கத்தை நாம் பெறுவதற்கு முயற்சி செய்தல் வேண்டும். அப்போதுதான் நாம் சிறப்பை யடைவோம். பாற்கடல் கடைந்தபோதுண்டாகிய படுவிஷம் சிவபிரானது திருமிடற்றை யடைந்தல்லவா சிறப்புற்றது. ஆகையால் நாமும், பரிசுத்தவுள்ளத்தரான பெரியோரைச் சேர்வோமானால் அன்பின் வசத்தராவோம். அவ்வன்பினால் நல்லறிவு சித்தித்து மேன்மை யுறுவோம்.

"நல்லாரிணக்கமும் நின்பூசை நேசமும் ஞானமுமே, யல்லாது வேறு நிலை யுளதோ?" என்றனர் பட்டினத்தடிகளும். இன்னும் பெரியோர், தம்மை யடைந்தவரை, நன்மார்க்கத்திற் றிருப்புவர்; சுவர்க்காதி பதவிகளிற் புகுத்துவர்; ஆதலின் இத்தகைய பெரியோரின் நேயத்தை நாம் அவசியம் கைக்கொள்ளுதல் வேண்டும்.

அப்படி நாம் பெரியவரைச் சேர்ந்து வாழ்வதை விடுத்து அவரைக் குறை கூறுவோமானால் அது, நமக்கு மிகுந்த தீங்கை யுண்டாக்கிவிடும். பெரியோர் நிந்தை யுடையார் எப்பொழுதும் கடைத்தேறுதல் முடியாது.

இஃதிங்ஙனமிருந்தும் தற்காலத்தில் சிலர் வரன்முறையான கல்விப்பயிற்சி யில்லாமையாலோ, தற்புகழ்ச்சியின் விருப்பத்தாலோ, தனச் செருக்காலோ, குலப்பெருமையாலோ, தமக்கு மிஞ்சினாரில்லை யென்னுந் துணிவாலோ, வேறெவ்வகைக் காரணத்தாலோ, முன்பின்பாராது நிரபராதியரும் அறிவாளருமாகிய பெரியோரைத் தம் மனம் போனவாறே யிகழ்ந்துரைக்கவும், பரிகசிக்க

வும், தாம்பிடித்த முயலுக்கு மூன்றேகாலெனச் சாதிக்கு முறைமையில் நின்றுபேசவும் துணிகின்றனர்.

இஃதவர் எவ்வகையிலும் முன்னேற்றமடைதலின்றிப் பிற்போக்குடையாதற்கும், தீக்கதியுட் சேர்தற்கும் உரிய கருவியாகுமேயன்றி அவர்க்கு எத்தகைய நற்பயனையுமளிக்காது. இதனால் பெரியோர்க்குண்டாகும் இழிவொன்றுமில்லை. அப்பெரியாரைப் பழிக்கும் அத்தற்புகழ்ச்சியுடையாரையே உலகத்தார் பலரும் இகழ்வர். அவர் இம்மை, மறுமை இரண்டிடங்களிலும் பயனிழந்தவராவர். ஆதலின், இன்னோர் பெரியார்ப்பழித்தலை விடுத்து அவரின் தண்ணருள் பெற்றுக் கடைத்தேறுதற்குரிய பேறுவினை இறைவன் இவர்க்குதவி யருளுவானாக.

ஓம் தத் ஸத்.

---

## சந்தாநேயர்களுக்கு அறிவிப்பு.

### 12-வது ஆண்டு.

**நேயர்களே!** இந்த அக்ஷயஹு அடுத்த ஆடிமீ க௳ (16—7—26) நம் ஆனந்தபோதினிக்கு 12-வது ஆண்டு பிறக்கப்போகிறது. ஆதலின் சந்தா நேயர்கள் ஷை 12-வது ஆண்டின் சந்தாத் தொகையை அடுத்த ஆனிமீ க௳ (15—6—26) க்குள், மணியார்டர் மூலமாகவோ, நேரிலோ நமக்கு வந்து சேரும்படி அனுப்பிவிடக் கோருகிறோம். பத்திரிகை வேண்டாதவர்கள் ஷை 15—6—26 க்குள் நமக்குக் கார்டின்மூலம் அவ்விவரத்தைத் தெரிவித்துவிடவேண்டும். மேற்கூறியபடி சந்தாத்தொகையை முன்பணமாக அனுப்பிவிடுகிறவர்களுக்கு அடுத்த ஆனிமீ சஞ்சிகையும், அக்ஷய வருட சஞ்சிகைகளும் சாதாரண போஸ்டில் அனுப்பப்பட்டுவரும். பத்திரிகை வேண்டாமென்று தெரிவித்தவர்களுக்கு அடுத்த ஆனிமீ சஞ்சிகை மட்டும் சாதாரண போஸ்டில் வந்துவிடும். மேற்கூறியபடி சந்தாத் தொகையை அனுப்பாதவர்களுக்கும், பத்திரிகை தங்களுக்குத் தேவையில்லையென்ற விவரத்தைத் தெரிவிக்காதவர்களுக்கும், அடுத்த 12-வது ஆண்டின் சந்தாவுக்கு அடுத்த ஆனிமீ பத்திரிகை வி.பி.யி லனுப்பப்படும். இவர்கள் தங்களுக்குப் பத்திரிகை வேண்டாமென்ற விவரத்தைத் தெரிவிக்காமலிருப்பதாலும் சந்தாத் தொகையை அனுப்பாமலிருப்பதாலும் பத்திரிகையை வி.பி. யில் பெற்றுக்கொள்ள இஷ்டமுடையவர்களாயிருக்கிறார்களென்றே நாம் நம்பி இவர்களுக்கு வி. பி. யனுப்புவதால் இத்தகைய நண்பர்கள் வி.பி. யைத் திருப்பிவிடாமல் பெற்றுக்கொள்ளும்படி கேட்டுக்கொள்கிறோம். இங்ஙனம் வி.பி. யை ஏற்றுக்கொள்கிறவர்களுக்கும் அக்ஷயஹு சஞ்சிகைகள் மாதந்தோறும் வழக்கம்போல் அனுப்பப்

பட்டுவரும். வி.பி. யில் 3-அணு அதிகச் செலவும், பத்திரிகைவந்து சேர்வ தற்கு வீண்காலதாமதமும் நேர்வதால் பெரும்பாலும் முன்பண மனுப் விடுவதே நலமென்பதை நேயர்கள் கவனிக்கவேண்டும்.

இங்ஙனம் முன்பண மனுப்பாமலும், பத்திரிகை தேவையில்லை யென்ற விவரத்தைத் தெரிவிக்காமலும் இருந்துவிட்டு வி. பி. வரும் போதும் அதைப் பெற்றுக்கொள்ளாமல் திருப்பிவிடுகிறவர்களுக்கு முன் சந்தாவுக்குச் சேரவேண்டிய ஆனிமீ பத்திரிகை சேராமல் திரும்பிவிடுவ தோடு, நமக்கும் வீணைப் போஸ்டேஜ் நஷ்டமுண்டாகிறது. ஆதலால் நண் பர்கள் மேற்கூறிய விஷயங்களைக் கவனித்து நடந்துகொள்ளும்படி வற் புறுத்திக் கூறுகிறோம்.

சந்தாதாரர்களுக்கும், நமக்கும் வீண்கஷ்டமும் நஷ்டமும் உண்டாகா திருக்கும்பொருட்டே நாம் புதுவருடம் பிறப்பதற்கு இரண்டுமாதங் களுக்கு முந்தியே இவ்விஷயங்களைத் தெரிவிக்கிறோம். இப்படித் தெரி வித்தும், சில நண்பர்கள் இவ்விஷயங்களைக் கவனித்து முன்பண மனுப் பாமலும், பத்திரிகை தேவையில்லையென்ற விவரத்தைத் தெரிவிக்காமலு மிருந்துவிட்டு வி.பி. போகும்போது அதைத் திருப்பி நமக்கு நஷ்டத்தை உண்டாக்கிவிட்டுத் தங்களுக்கு ஆனிமீ சஞ்சிகை வந்து சேரவில்லை யென்று நம்மீது குறை கூறுகின்றார்கள். சிலர், இந்த அறிவிப்பைப் பார்த்திருந்தும் பேசாமலிருந்து வி.பி யைத் திருப்பிவிட்டு, “நாங்கள் பேசாமலிருப்பதே பத்திரிகை தேவையில்லையென்பதற் கறிகுறி; அதைப் பற்றி நாங்கள் அணாயனுச் செலவுசெய்து கார்டின்மூலம் தெரிவிக்கவேண் டியதில்லை; நீங்கள் என் எங்களுக்குக் கார்டு எழுதித் தெரிவித்து எங்கள் சம்மதத்தைக்கேட்டுத் தெரிந்துகொண்டு வி.பி. யனுப்பலாகாது? ஆத லால் நீங்கள் வி. பி. யனுப்பி எங்களுக்கு ஆனிமீ சஞ்சிகைசேராமல் திரும்பிவிடும்படி செய்தது நியாயமாகாது” என்று குதர்க்கமான லெட்டர் கள் எழுதுகிறார்கள்.

நண்பர்களே! இவற்றில் நீங்கள் சில விஷயங்களைக் கவனிக்கவேண் டும். இந்த அறிவிப்பை நாங்கள் இரண்டுமாதங்களில் வெளிப்படுத்தியும், முன்பண மனுப்பாமலும், பத்திரிகை தேவையில்லை யென்பதைத் தெரி விக்காமலு மிருப்பவர்கள் நிச்சயமாக வி. பி. பெற்றுக்கொள்ள இஷ்ட முள்ளவர்களென்றே எங்களால் கருதப்படுகிறார்கள். அவர்கள் ஏதோ அசந்தர்ப்பத்தால் முன்பண மனுப்பமுடியாம விருந்துவிட்டார்கள் என்று கருதியே நாங்கள் அவர்களுக்கு வி.பி யனுப்புகிறோம். சிலர் குதர்க்கமாய் லெட்டர் எழுதுகிறபடி இவர்களெல்லோரையும் பத்திரிகை வேண்டாத வர்களென்று நாம் எப்படிக் கருதிவிடமுடியும்? இவர்களுள் சிலரே, கவனி யாமையாலோ, வீண்குதர்க்க புத்தியாலோ இந்த அறிவிப்பின்படி நடப் பதைவிட்டுப் பத்திரிகை வேண்டாமென்னும் எண்ணத்தை மனதில் வைத் துக்கொண்டிருந்து வி.பி வந்ததும் திருப்பிவிடக்கூடியவர்களா யிருப்பார்

கள். இவர்களை நாம் எப்படிக் கண்டுகொள்ள முடியும்? அப்படித் தெரிந்து கொள்ள வேண்டுமென்றால் முன்பண மனுப்பாத எல்லோருக்குமே கார்டனுப்பி வி.பி. அனுப்பலாமா அனுப்பக்கூடாதா என்ற விவரத்தை ஒவ்வொருவரிடத்தும் கேட்கவேண்டும். சிலர் செய்கையைமுன்னிட்டு அதிகப் பணம் செலவிட்டு எல்லோருக்கும் கார்டனுப்ப முடியுமா? பத்திரிகை வேண்டாதவர்கள் சிலரே இருப்பார்கள். அவர்கள் அவ்விவரத்தை அரையணுக் கார்டில் தெரிவித்துவிடுவது சுலபம். அதனால் இருவகையாருக்கும் தொந்தரவிராது. நாம் எல்லோரிடத்தும் கார்டனுப்பி வி. பி. யனுப்ப அபிப்பிராயம் கேட்பதென்றால் அதிகப் பணச்செலவும் வீண்தொந்தரவு முண்டாகும். இவற்றையெல்லாம் நன்கு ஆராய்ந்துபாராமல் சிலர் குதர்க்கமான லெட்டர் எழுதுவது எவ்வளவு பொருத்தமானதென்பது அறிவுடையார்க்கு விளங்கும்.

ஆதலின், நேயர்கள் இந்த அறிவிப்பின் விஷயங்களைக் கவனித்துச் செய்யுமாறு மிகவும்மீண்டும் வற்புறுத்திக்கூறுகிறோம். பத்திரிகை தேவையில்லாத நண்பர்களும் வீண் குதர்க்கமும், நியாய விரோதமும் செய்வதை விடுத்து அவ்விவரத்தைக் கார்டின்மூலம் மேற்குறித்த காலத்திற்குள் தயவுடன் தெரிவித்துவிடும்படி கேட்டுக் கொள்கிறோம்.

பின்னும், சிங்கப்பூர் முதலிய மலேயா நாடுகளுக்கு வி. பி. இல்லையாதலின் அங்குள்ள சந்தாதாரர்கள் எல்லோருமே முன்பணம் அனுப்பிவிட வேண்டும்.

முன்பண மனுப்புவோர் பழய சந்தாதாரர்களாயிருந்தால் தங்கள் சந்தா நம்பரைக் குறிப்பிட்டு அடுத்த 12-ஆம் ஆண்டுக்கு என்று எழுதியனுப்பவேண்டும். புதிதாய்ச் சேருகிறவர்கள் புதிய ஆண்டுக்கு என்று எழுதவேண்டும். சந்தா நெம்பர் ஒவ்வொரு மாதத்திலும் வரும் சஞ்சிகையின் மேல் உறையில் இருக்கும். அதைத் தெரிந்து எழுதவும். அதில் (1190) என்ற ரிஜிஸ்டர் நெம்பருமிருக்கும். அதை யெழுதிவிடாமல் சந்தா நெம்பர் என்று போட்டிருப்பதைப் பார்த்து எழுதவும். சந்தா நெம்பர் தெரியாதவர்கள் முன்பண மனுப்பாமல் வி.பி. யிலேயே சஞ்சிகை பெற்றுக்கொள்வது நலம்.

சஞ்சிகையை நிறுத்திவிட எழுதுவோரும் ஷை சந்தா நெம்பரைக் குறித்தெழுதவேண்டும்.

ப-ர்.

---

## ஒற்றுமைக்கு எது வழி?

ஆனந்தபோதினி பங்குனிமாத வெளியீட்டுத் தலையங்கத்தினிறுதியில், ஆசிரியர் "பொய்யாமொழிப் புலவரும்—சீநக்க முதலியாரும்" என்னும் கதையின் மூலமாக உண்மை ஒற்றுமையை விளக்கிச், "சிலர் அங்ஙனமின்றிப் போலித்தனமாக ஒற்றுமை காட்டுகின்றனர்" என சந்தர்ப்பத்திற்கேற்பப் போலி ஒற்றுமை என்ற அளவில் சுருங்கக் காட்டியுள்ளார். அது

வும் மிக முக்கிய விஷயங்களி லொன்றுமாகலின் அதைப்பற்றி ஈண்டுச் சிறிது ஆராய்வாம்.

ஒற்றுமையின் தன்மை:—ஒற்றுமை என்பதற்கு ஒன்றுபட்டிருக்குந் தன்மை—வேற்றுமையின்றி யிருக்குந்தன்மை—ஐக்கியபாவத்தோடிருக்குந்தன்மை என்பது திரண்ட பொருளாம். கடவுள் படைப்பிலடங்கிய சகல ஜீவராசிகளுக்கும் இஃது இன்றியமையாத குணமாக அமைக்கப்பட்டுள்ளது. ஆராய்ந்து பார்க்குமிடத்து ஒவ்வொருவரிடத்தும், ஒவ்வொன்றினிடத்தும், இக்குணம் இயல்பாகவே அமைந்துள்ளதென்பதும், இக்குணமில்லாமல் எவ்வுயிரும் உலகத்தில் வாழ முடியாதென்பதும், உலகமும் இதனாலேயே நிலைபெற்றுள்ளதென்பதும் இனிது விளங்கும்.

ஒற்றுமையின் அவசியம்:—'இரண்டுபட்ட ஊரில் குரங்கும் குடியிராது', 'ஊர் இரண்டுபட்டால் கூத்தாடிக்குக் கொண்டாட்டம்', 'ஒற்றுமையில்லாக் குடும்பம் உருக்குலைந்துபோம்', 'ஒற்றுமையில்லாப் பட்டணம் சிறப்படையாது', 'ஒற்றுமையில்லாச் சமூகம் சீர்கெடும்', 'ஒற்றுமையில்லா நாடு மேன்மையடையாது' ஆகலின் குடும்பமாயினும், பட்டணமாயினும், சமூகமாயினும், நாடாயினும், இவற்றைப்போன்ற வேறெதுவாயினும் ஒற்றுமையாலேயே உன்னத நிலையடையவேண்டும். ஐக்கியபாவமுள்ள ஐரோப்பா ஒப்புயர்வற்று விளங்குவதும், அஃதில்லாத இந்தியநாடு ஏழ்மையடைந்திருப்பதும் நியாயந்தானே. இராமபிரான் காடு சென்றதும், பாரதப்போர் நிகழ்ந்ததும் குடும்பக் கலகத்தாலல்லவா?

ஓர் வயோதிகன் தன் பிள்ளைகளை யழைத்து ஓர் விறகுக்கட்டைக் காட்டி அதிலுள்ள விறகுகளைத் தனித்தனியாக எடுத்து உடைக்கும்படி சொல்ல அவர்கள் அவ்வாறே எடுத்து ஒவ்வொன்றையும் மிக்க இலேசாக உடைத்துவிட்டார்கள். மீண்டும் அவற்றைச்சேர்த்து உடைக்கும்படியாகச் சொல்ல அது அவர்களால் முடியவில்லை. அதன்மூலமாக அவ்வயோதிகன் தன் பிள்ளைகளுக்கு ஒற்றுமையைக் காட்டினது எவ்வளவு விவேகம்.

'ஒரு காட்டில் நான்கு எருதுகள் வசித்து வந்தன. அவற்றைக் கொன்று தின்ன ஒரு சிங்கம் பலமுறை முயன்றும் அவைகள் ஒற்றுமையாயிருந்து எதிர்த்து வந்தமையால் முடியவில்லை. முடிவில் ஒரு நரியின் தந்திரத்தால் அவ்வெருதுகள் ஒற்றுமை யிழந்து விரோதப்பட்டன. அச்சமயம்பார்த்துச் சிங்கம் அவற்றைக் கொன்று தின்றது' என்னும் கதை வளவு அழகானது!

சரீரத்திலுள்ள கை கால் முதலிய அவயவங்கள் வெவ்வேறு உருவங்களை யுடையனவைகளாயும், வெவ்வேறு தொழில்களைச் செய்பவைகளாயுமிருந்தாலும், எல்லாம் ஒரு சரீரத்தைச் சேர்ந்தவைகளாய் அதற்குரிய காரியங்களை ஒற்றுமையாய்ச் செய்கின்றனவல்லவா? அப்படிச் செய்யாவிட்டால் அச்சரீரத்தின் கதி யாதாம். அவ் அவயவங்களின் கதிதான்

யாதாம். "ஒருகாலத்தில் எல்லா அவயவங்களும் வயிற்ருேடு பிணங்கிக் கொண்டன. கால்கள் இந்த வயிற்றை நாங்கள் ஏன் சுமந்துகொண்டு திரியவேண்டும். எங்களுக்கென்ன தலையெழுத்தா? என்று சும்மா இருந்து விட்டன. கைகள் நாங்கள் பாடுபட்டுக் கொடுக்க நன்ருய்த் தின்றுவிட்டு வண்ணான் சால்போலப் பருக்கின்றது இந்த வயிறு. இனி அடக்குகிரும் அதன் கொழுப்பை என்று ஒன்றும் செய்யாமலிருந்துவிட்டன. அப்படியே வாய் நான் ஒன்றையும் வாங்கி வயிற்றிற்குள் தள்ளமாட்டேன் என்றும், பற்கள் நாங்கள் ஒன்றையும் மெல்லமாட்டோம் என்றும் கூறி விட்டன. இரண்டு நாட்களாயின; வயிற்றில் ஒன்றுமில்லை. கை கால்கள் பலமற்றுச் சோர்ந்தன. கண் பார்வை யிழந்தது. காதடைப்புண்டது. எல்லா அவயவங்களும் வாட்டமடைந்தன. கடைசியாக எல்லாம் கூடி யோசித்து 'ஓ ஓ! நமக்கே ஆபத்தாய் முடியும்போலிருக்கிறதே' யென்று முன்போலவே வயிற்ருேடு நட்புக்கொண்டு அதற்குத் தீனி கொடுப்பதன் மூலமாக அவைகள் சுகமாக விருந்தன." அப்படியே,

நாடும், நகரமும், குடும்பமும், ஜாதியும், சமூகமும், சங்கமும் முதலான சரீரங்களில் பல ஜாதியாரும், பல மதத்தினரும், பல தொழிலாளரும், பல வகுப்பினரும், பல அபிப்பிராய முடையவர்களு மிருப்பினும் அவற்றின் முன்னேற்றத்திற்குரிய விஷயங்களில் பொதுவாகச் சகலரும் ஒன்றுபட்டிருத்த லத்தியாவசியமாகும்.

**உண்மை ஒற்றுமையும், போலி ஒற்றுமையும்:**—உண்மைப் பொருளே உயர்வுள்ளது. போலி யென்பது ஒன்று வேருென்றைப் போலத் தோன்றி ஆராய்ச்சியில் அப்பொருளாகாதது; உண்மையில் ஒற்றுமையில்லாமலும், ஆனல் ஒற்றுமைபோலக் காணப்பட்டுக்கொண்டு மிருப்பது போலி ஒற்றுமையாம். மிக்க ஆழமாகத் தோண்டப்பட்ட கிணற்றினுள்ளிருந்துவரும் நீரூற்ருனது வற்ருது நின்று பலர்க்கும் பயனளிக்கும்; மேற்போக்காகத் தோண்டப்பட்ட மேலூற்றுநீர் அங்ஙனம் பயனளியாது. அதுபோல, உள்ளத்தின்கண் தோன்றி நிகழும் ஒற்றுமையே உண்மை ஒற்றுமையாம். மன ஒற்றுமையே ஒற்றுமை. மேலாடம்பரங்களால் உண்டாகும் ஒற்றுமை போலி ஒற்றுமையேயாகும்.

**அன்பே ஒற்றுமைக்கு ஆதிகாரணம்:**—உண்மையான ஒற்றுமைக்கு முதற்காரணமாயுள்ளது அன்பு. அன்பாவது 'தொடர்பு பற்ருது இயல்பாக எல்லா வுயிர்கள் மேலும் செல்வ'தாகலின் அன்பே ஒற்றுமையுண்டாதற் கேற்ற வழியாம் என்பர் பெரியோர். அது எவ்வாருயினும், ஒவ்வொருவரிடத்தும் 'என் ஊரார், என் ஜாதியார், என் நாட்டார்' என்னும் அபிமானமும், தம்மைப்போலவே பிறரையும் மதிக்கும் குணமும் இருத்தல் ஒற்றுமைக்கு இன்றியமையாதனவாம். இவற்றையே முன் சொன்னபடி பெரியோர் அன்பு அருள் என்ப. உதாரணமாக, ஒருவன் தன் பெற்ருேரிடத்தாயினும், தன் குடும்பத்தினிடத்தாயினும் 'இவர்கள் என் பெற்ருேர்,

இது என் குடும்பம்' என்னும் நேசம் அல்லது அபிமானமில்லாதவனாயின் அவன் அவர்களுடைய க்ஷேமத்தில் சிறிதேனும் கவலைகொள்வானா? அவ்வனமில்லாதபோது அவர்களுக்குள் பரஸ்பரம் ஒற்றுமையுண்டாகுமா? என்னமோ அவர்கள் ஒரு வீட்டிலிருக்கின்றார்களே; ஒன்றாய்ச் சாப்பிடுகிறார்களே; பேசிக்கொண்டும் சிரித்துக்கொண்டும் இருக்கிறார்களே ஒற்றுமை யில்லாம லிருக்குமா? எனின், அதுதான் போலி ஒற்றுமை.

இதுதானா ஒற்றுமைக்த வழி:—சிலர் வேறு வழிகளும் கூறுவர். அவ்வழியிலுள்ளவர்களுக்கும் உள்ளன்பு வேண்டுமென்பது உடன்பாடேயாயினும், அவ்வன்பை வெளிப்படுத்திக் காட்டவேண்டுமென அவர்கள் சில முறைகளைக் கையாளாநிற்பர். அன்பை வெளிப்படுத்திக் காட்டவேண்டுமென்பது நியாயமே. அன்பு என்ப தொன்றிருந்தால் அது உள்ளே அடைபட்டுக் கிடவாது. நாம் அதைப் பலவந்தமாய் வெளிப்படுத்த வேண்டுவதின்று. அது நம் கட்டிலடங்காது. இதுபற்றியே 'அன்பிற்குமுண்டோ அடைக்குந்தாழ்' என்றார் பொய்யாமொழியார். இனி, அவர்கள் கூறும் வழிகளாவன:—எல்லோரும் ஒரே ஜாதியாராகவும், ஒரே மதத்தினராகவும் இருத்தல்வேண்டும். அப்படி யிருக்கமுடியாவிட்டாலும் சம பந்தி போசனம் செய்தல் வேண்டும். யாவரும் ஜாதிமதபேதம் பாராட்டாமல் சம போசனம் செய்யப் பழகிவிட்டால் ஒற்றுமை தானாகவே உண்டாய்விடும் என்று அதற்காகச் சில சங்கங்களை ஆங்காங்குத் தாபித்து வருகின்றனர். ஒற்றுமையின் பொருட்டு இவ்வளவாயினும் செய்யப்படுகின்றதே என்பது மட்டில், அக்காரியம் மெச்சத்தகுந்ததேயாயினும், எண்ணிய இலக்கு எய்தப்படுமோ என்பதுதான் சந்தேகம். ஆனால் அதுவும் முற்கூறிய அன்பையும் அதன்பயனாகிய அருளையும் அடிப்படையாகக் கொண்டிருக்குமானால் பொன்மலர்மணமும் பெற்றதுபோலாம். அன்பின்றிச்செய்யும் ஏனைய காரியங்கள் நிஷ்பிரயோஜனமாம். 'அடியற்றால் நுனிவீழாமலிருக்குமா?' அவ்வாறின்றி ஒத்த அந்தஸ்தையுடைய சிலர், மாதம் ஒரு முறையோ இருமுறையோ ஓரிடத்திற் கூடி, சிற்றுண்டியருந்திச் சிறிதுநேரம் வேடிக்கையாகச் சம்பாஷித்துக்கொண்டோ, பந்தாட்டம் முதலாகிய விளையாடல்களைப்புரிந்துகொண்டோ இருந்துவிட்டுப் போய்விட்டால், அது களியாட்டுச் சங்கமென்னும் பெயர்க்குரியதாகுமேயன்றி, ஒற்றுமையை வளர்க்கும் சங்கமாகாது. அதனால் உண்டானதாகக் காணப்படும் ஒற்றுமையும் உண்மையொற்றுமையாகாது போலி ஒற்றுமையேயாகும். ஒரே ஜாதியாராகவும் ஒரே மதத்தினராகவும் இருந்தால் ஒற்றுமை உண்டாவதாயின், ஒரே ஜாதியினராயும் ஒரே மதத்தினராயுமுள்ள ஐரோப்பியருக்குள் விரோதமுண்டாவதேன்? கடந்த ஐரோப்பா யுத்தத்தில் ஈடுபட்டிருந்தவர்கள் ஒரே ஜாதியினரும் ஒரே மதத்தினருமல்லவா? அன்றியும் ஒரு தாய் வயிற்றிற் பிறந்து வளர்ந்த சகோதரர்க்குள் ஒற்றுமையில்லாம லிருப்பதென்ன? ஒற்றுமையின்பொருட்டு அன்னிய மதத்தாருடனும் அன்னியஜாதியாருடனும் கலந்

துன் டுறவாடினவன் தன்வீட்டை யடைந்ததும் தாய் தந்தையரையும் சகோதரரையும் வைது அடிக்கப்புகுந்தால் அவன் சங்கத்தின் பயனென்ன? ஆகையால்,

'புணர்ச்சி பழகுதல் வேண்டா; உணர்ச்சிதான்
நட்பாங் கிழமைதரும்.'
'முகநக நட்பது நட்பன்று; நெஞ்சத்
தகநக நட்பது நட்பு.'

என்றும் கூறியுள்ள தமிழ்மறையின்படி, புணர்ச்சி, பழகுதல், உணர்ச்சி யென்னும் மூன்றில் உணர்ச்சியே நட்பிற்குச் சிறந்த காரணமாமென்பது போல் அன்பும் அருளுமுடைமையே ஒற்றுமைக்குச் சிறந்த வழிபாடாம்?

குடும்பமே ஒற்றுமையைக் கற்குமிடம்:—'அறையிலாடிய பிறகே அம்பலத்திலாடவேண்டும்', 'சிறியதைச் செய்து பழகியபின்பே பெரியதைச் செய்ய முயலவேண்டும்', 'அ-ஆ-இ-ஈ முதலிய எழுத்துக்களைக் கற்றுச் சிறிய புத்தகம் படித்துப் பயின்ற பிறகுதான் பெரிய புத்தகம் படிக்கப் பிரயத்தனம் பண்ணவேண்டும்'. ஆகவே ஒற்றுமையை விரும்புபவன் அதைத்தன் குடும்பத்தில்தான் முதல் முதலாகக் கற்கவேண்டும்; சகோதரர், பெற்றோர், மனைவி, சுற்றத்தார் முதலானவர்களிடம் ஒற்றுமையாயிருக்கவேண்டும். 'உள் சுவர் உப்புலுக்கப் புறஞ்சுவர் கோலஞ்செய்வதிற் பயனில்லை.'

நம் தேச ஒற்றுமை நிலை.—நம் இந்துதேசத்தில் இந்த ஒற்றுமையானது எந்த நிலையிலிருக்கிறதென்பதை யாராயின் பெருநகைப்பிற்கிடமாம்: ஒற்றுமையானது தனக்கு எதிர்மறையாகிய ஜன்மசத்துருவை நேசித்திருக்கிறது நம் தேசத்தில். இது எத்தனை வியப்பு! அதாவது, ஒற்றுமையானது வேற்றுமையினிடத்திற் சேர்ந்து அதற்கு மேன்மையுண்டாக்குகின்றது. இயல்பாகவுள்ள ஜாதிமதப் பிரிவுகளன்றி,

பிராமணர் - பிராமணரல்லாதார், தீண்டாதார் - தீண்டப்படாதார், ஹிந்து-முஸ்லீம், வைணவர்-சைவர், வடகலை-தென்கலை, வேதாந்தம்-சித்தாந்தம், முன் தீர்த்தம்-பின்தீர்த்தம், ஒத்துழைப்போர்-ஒத்துழையாதார், மாறுதல் வேண்டுவோர்-மாறுதல் வேண்டாதார் முதலிய எத்தனையோ கட்சிகள் தோன்றி ஒற்றுமையை அலைக்கழிக்கின்றன. அவற்றை எண்ணத் தொலையுமோ ஏடிடங்கொள்ளுமோ?

பிரிவுகள் பகையுண்டுபண்ண வேண்டுமோ?—ஜாதிப் பிரிவுகளும், மதப் பிரிவுகளும் ஒரு விஷயத்தில் பலவகைப்பட்ட அபிப்பிராயபேதங்களும் இருப்பது சாதாரணமே. ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் ஜாதி முன்னேற்றத்திற்கும், மதாபிவிருத்திக்கும், தேசாபிவிருத்திக்கும் பாடுபடுவதும் நியாயமே. ஆயினும் ஒன்றையொன்று பகைத்து முதலுக்கே மோசமுண்டாகும்படி செய்யலாகாது. உதாரணமாக ஓர் பெருமாள் கோவில் உற்சவத்தில் சுவாமி புறப்பாட்டில் வடகலைக்கும் தென்கலைக்கும் அபிப்

பிராய பேதமுண்டானால் அதற்காகச் சுவாமியை நடுவீதியில் போட்டுவிட்டு மண்டை உடைத்துக்கொண்டு நியாயத்தீர்ப்பிற்குப் போகலாகாது. எந்தச் சுவாமியின் அருளையடைய இவர்கள் பக்தியோடு வேதபாராயணஞ் செய்தனரோ அந்தச் சுவாமியை யவமதிப்பது அழகல்லவே. பானையையல்ல பாலையே பார்க்கவேண்டும் 'பிள்ளை வரத்திற்குப்போய்ப் புருஷனையிழக்கலாமா?' இதைக் கூர்ந்துநோக்கி நடக்கவேண்டும்.

**விட்டுக்கொடுப்பது அவமானமல்ல:**—ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் அபிப்பிராயமே சரியெனச் சொல்வதற்கும், அதன்படி நடப்பதற்கும் உரிமை யுடையவர்களாயினும் ஒற்றுமைப்படவேண்டிய விஷயத்தில் தங்கள் பிடியைச் சிறிது தளர்த்தி விட்டுக்கொடுக்கலாம். அது அவமானமல்ல. யாவரும் போற்றத்தக்க பெருந்தன்மையேயாகும்.

**எல்லாம் ஒரு தாய் வயிற்றுப் பிள்ளைகள்:**—முன்னர்க் கூறிய சரீர அவயவ நியாயத்தின்படி நம் தேசத்தில் பல ஜாதியாரும், பல மதத்தினரும், பல கொள்கையாளருமா யிருப்பினும் நாம் எல்லோரும் ஒரு தாயகட்டிற் பிறந்த பிள்ளைகளே யென்னும் உணர்ச்சியை நழுவவிடலாகாது. பாரத தாயின் பிள்ளைகளே. இந்தியமாதாவின் மைந்தர்களே. மாதாவை மகிழ்விப்பது புத்திரர் கடமை. மைந்தர்கள் யாவரும் ஒற்றுமையாயிருக்கவேண்டுமென்பதையே ஒரு தாய் விரும்புவாள். (நாம் எல்லோரும் சகோதரரைப்போலிருக்கவேண்டும் என்று கூறும்பொழுது ஒரு விஷயம் கவனத்திற்கு வருகிறது. அந்த உவமை பொருத்தமில்லாததாகவும் காணப்படுகிறது. ஏனெனில், சகோதரரைப்போல் இருக்கவேண்டுமென்பது, 'சண்டை போட்டுக்கொண்டு ஒற்றுமையின்றி யிருக்கவேண்டு'மென்று கூறுவதுபோலாகும். அஃதெப்படியெனில் நூற்றுக்கு எத்தனை குடும்பங்கள் சகோதரவொற்றுமையுடைய குடும்பங்களாயிருக்கும் என்பது ஆராய்ந்து பார்ப்போர்க்கு இனிது விளங்குமாகலின் என்க. ஆகையால் சகோதரர் ஒற்றுமை என்பதற்கு நியாயமாக முறைப்படி இருக்கவேண்டிய சகோதர ஒற்றுமையின்படி என்று அர்த்தங்கொள்ளவேண்டும். தற்போது எங்கும் காணப்படும் போலிச் சகோதர ஒற்றுமையின்படி அல்ல.)

ஒருவன் கிறிஸ்தவனா யிருக்கலாம், ஒருவன் மூகம்மதியனா யிருக்கலாம், ஒருவன் வைணவனா யிருக்கலாம், ஒருவன் சைவனாயிருக்கலாம். பிராமணனாயினும் சரி, பஞ்சமனாயினும் சரி, ஏழையாயினும் சரி, பணக்காரனாயினும் சரி, நமது அபிப்பிராயத்தை அனுசரிப்பவனாயினும் சரி, நமது அபிப்பிராயத்தோடு மாறுபடுபவனாயினும் சரி, வேறெவனாயினும் சரி, கடவுள் படைப்பில் எல்லாம் ஒன்றே. அவர் பார்வையில் அவர் பிள்ளைகளாகிய நாமனைவரும் சகோதரரே. பாரத மாதாவாகிய ஒரு தாய் வயிற்றிற் பிறந்த சகோதரரே என்னும் எண்ணத்தைக்கொண்டிருப்போமானால் ஒற்றுமை தானாகவே உண்டாகும். அதன்பிறகு ஒற்றுமை யென்

பதொன்று உண்டாகுமென்பதில்லை. அதுவே ஒற்றுமை. அதுவே உண்மை ஒற்றுமை; யாராலும் அசைக்க முடியாத ஒற்றுமை; எதனாலும் பிளவுபடாத ஒற்றுமை.

இதுகாறும் கூறியவாற்றால் ஒற்றுமை மிக்க அவசியமானதென்பதும், அந்த ஒற்றுமையும் உண்மை ஒற்றுமையாக இருக்கவேண்டுமேயன்றிப் போலி ஒற்றுமையாக இருக்கலாகாதென்பதும், அன்பையும் அருளையும் அடிப்படையாகக்கொண்டு பிறப்பதே உண்மை ஒற்றுமையாமென்பதும், சமபந்தி போஜனம் முதலியவற்றால் மாத்திரம் அவ்வொற்றுமை உண்டாகிவிடாதென்பதும், அவயவங்கள் பலவாதல்போலப் பல பிரிவுகள் தோன்றினும் ஒன்றையொன்று பகைக்கலாகாதென்பதும், ஒற்றுமையைக் கற்பதற்கு வீடே சிறந்த இடமென்பதும், யாவரும் ஒரே தாய் வயிற்றிற் பிறந்த சகோதரர்களே யென்பதும் பிறவும் பெற்றாம்.

ஆகையால் அத்தகைய ஒற்றுமை யுண்டாகுமாறு யாவரும் முயல்வோமாக. எல்லாம்வல்ல இறைவனருளும் துணைநிற்பதாக.

பூ. ஸ்ரீநிவாசன், தமிழ்ப்பண்டிதர், சித்தூர்.

குறிப்பு:—ஒற்றுமையின் ஆவசியகத்தை நாம் பன்முறை, பல தலையங்கத்தின்கீழ் வரைந்து வந்துண்மையின், 'தற்கால மகத்துவத்' தைச் சிறிது பேசப்புகுந்த இடத்தில் அதனை விரிக்காது விட்டனம். நமது தேசமுன்னேற்றத்தையும், ஐக்கியபாவத்தையும் விரும்பி, அவ்விஷயமாக நம்மவர் ஆங்காங்கே வாசா கயிங்கரியமாய்ப் பேசிவிட்டுக் காரியசித்தியைக் கவனியாதிருத்தலால், எடுத்துக்கொண்ட அப்பேச்சு படுத்துக் கொண்டிருக்கிறதேயொழிய, பயன்பெறவில்லையே என்னும் நோக்கத்தை யுட்கொண்டு, உண்மையொற்றுமை இவ்வாறிருக்கவேண்டுமென்று சீநக்க முதலியாரின் சரித்திரத்தைக் குறிப்பிட்டு வற்புறுத்தலானோம்.

இதை ஆதாரமாகக்கொண்டு நமது நண்பர் சித்தூர் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீமான் பூ. ஸ்ரீநிவாசலு நாயுடு அவர்கள் ஒற்றுமையைப்பற்றி விஸ்தாரமாகவும் படிப்பவர் மனதைக் கவருந் தன்மையாகவும் எழுதிய இவ்வியாசம் ஒவ்வொருவருங் கவனிக்கத்தகுந்தது; நடத்தையில் அதைக் கொண்டுவரவும் சிரத்தை யெடுத்துக்கொள்ளவேண்டியது. அப்போதுதான் நமது எண்ணம் நிறைவேற வழியுண்டாகும். ப-ர்.

---

## தைரிய அறிவிப்பு.

மாட்சிமைதங்கிய கனதன காருண்யம் நிறைந்தவர்களே! ஓர் விண்ணப்பம்.—

1925ஞு டிசம்பர்மீ 15௳ பிரசுரமான ஆனந்தபோதினி 240-வது பக்கத்தில் இருக்கும் வருங்கால நிகழ்ச்சிக் குறிப்பு என்பதில், இந்தியாவிலிருந்து இலங்கைப் பூமி வரையில் மழையில்லை யென்பதும், வேளாண்மைக் குறைவுண்டாமென்பதும், பூமியில் பெரும் பஞ்சமுண்டாமென்ப

தும், இவையன்றித் தொத்து வியாதிகளால் அளவற்ற ஜனங்கள் அழிந்து போவார்களென்பதும், மேதாவியர் முதல் கயவர் வரை யுத்தத்தால் மடிந்து போவார்களென்பதும், கொலை—களவு—கொள்ளை முதலியவைகள் அதிகமாய் நடைபெறுமென்பதும், உலகெங்கும் பசிநோயால் பலர் மடிவார்களென்பதும் ஒருபோதும் நடைபெறுவென்பது உண்மை. மேல் கண்ட பிரசுரதாருடைய வாக்கியத்தை நம்புவதாலேயே மூன்றுவருடங்களுக்கு ஆகாரம் வேண்டுமேயென்னும் கருத்தால் கன-தன உதவியில்லாதவர்கள் உள்ளவர்களைக் கொள்ளையடித்துக் கலகம் வெட்டுக் குத்து முதலியவைகளை நடத்துவார்கள் என நம்புகிறேன். இஃதன்றி இறந்த கால பலன்களைத் தழுவி எந்நிகழ்ச்சியும் நடப்பதன்றிப் புதிதாய் மேற்படியார் பிரசுரித்தபடி எதுவும் நடைபெறாது. ஆகையால் மாட்சிமைதங்கிய சர்வ ஜனங்களும் யாதொரு பயமுமின்றி வாழ்வார்களென அதிக தாழ்மையோடு தெரிவித்துக்கொள்கிறேன். A. சின்னசாமி ஆச்சாரி.

---

## சாயாதரிசனம் விரும்புவோர்க்கு எச்சரிக்கை.

அன்பர்காள்!

சென்ற வருஷம் மாசி மாதத்திய "ஆனந்தபோதினி"யில் சாயாதரிசனம் என்ற விஷயம் எழுதிய நண்பர் சாநூலிலிருந்து எழுதியிருப்பதோடு, அதைக் காண்போரையும் அதிற் கூறியபடி செய்து பயனடைய வேண்டுகின்றார்.

அதிற் கூறியபடி நடக்க விரும்புகிறவர்கட்கு எச்சரிக்கை செய்யவே இவ்விஷயம் ஈண்டு வரையப்படுகிறது.

சாயாதரிசனம் சரம் பார்ப்பவர்களுக்காகச் சாநூலில் கூறப்பட்டதேயன்றி ஏனையோர்கட்கன்று. அப்படிப் பார்ப்பதால் அவர்கள் தமக்கு வரும் நன்மை தீமைகளை முன்னதாகவே அறிந்துகொள்வார்கள். அவர்கள் நூலிற் கூறியவாறு, இரேசக பூரக கும்பகங்களால் திரிகரணங்களையும் மனதையும் சுத்தமாக வைத்துக்கொண்டிருப்பவர்கள். அப்படிப்பட்டவர்களுக்கு அத்தரிசனம் கிரமமாகக் கிடைப்பதோடு நூலிற் கூறிய சித்திகளையும் தரும். நிற்க,

நண்பர் கூறிய சாநூலின் கவியின் அவதாரிகையில் "சரம் பார்க்கிறவர்கள் நன்மை தீமை யறிவதற்காகச் சாயாபுருஷ தரிசனம் கூறப்படுகிறது" என எழுதியிருப்பதைப் பார்த்தவர்கள், பிராணாயாமம் செய்து திரிகரணசுத்தம் அடையாதார் சாயாதரிசனம் செய்வதற்கு அருகரல்லர் என்பதை யறிவர்.

மேலும், சாயாதரிசனத்தின் பலனை யறிந்தவர்களுள் நானும் ஒருவன் ஆதலின் என் அனுபவத்தைச் சுருக்கக் கூறுகிறேன். நான் நூலிற்சொல்லியபடி பிராணாயாமம் செய்து சாயாதரிசனம் பார்த்து வரும்பொழுது இல் அசம்பவங்களால் பிராணாயாமம் செய்வதை நிறுத்திவிட்டேன். தரிச

ணம் மட்டும் வழக்கம்போல் செய்துவந்தேன். அதனால் ஆகாயத்தில் தோன்றும் உருவத்தில் சில அங்கங்கள் காணப்படவில்லை. அதன் பலன் 6 மாதத்தில் மரணம் என நான் தெரிந்தேன். பின்பு நாள் செல்லச்செல்ல எனக்கு உடல் நடுங்கிற்று; பேச்சு நின்றது; அறிவும் மயங்கிற்று; பயமும் தோன்றிற்று. பின்னர் நான் தரிசனத்தையும் நிறுத்திவிட்டேன். மாதமும் 6 கழிந்தது. எனது பெரியோர்களும் விஷயத்தைத் தெரிந்து பிராணாயாமமின்றிச் சாயாதரிசனம் செய்ததே வியாதிக்குக் காரணமென உணர்ந்து, அதற்கான அவுஷத பரிகாரங்கள் செய்தனர். பின் குணமடைந்தேன்.

ஆதலின், சாயாதரிசனம் செய்ய விரும்புவோர் நூலிற் சொல்லியபடி பிராணாயாமம் செய்து திரிகரணசுத்தி யடைந்து, தரிசனசித்தி பெறுவார்களாக.

சு. சாமிநாத பட்டர், பசுவந்தனை.

---

## மரணத்திற்குப் பின் மனிதர் நிலை.

(408-ம் பக்கத் தொடர்ச்சி.)

என் தகப்பனாருக்கு மூக்கினிடம் தற்செயலாய் நேர்ந்த ஒரு விசேஷமான வெண்மைக் குறியுண்டு. இக்குறி இப்போது சுத்தமாகக் காணப்பட்டது. அவர் தமது கையைவிரிக்க ஒருவிரல் இக்குறியின்மேல் போய் நின்றது. இவ்வித அடையாளங்களால் என்முன்வந்த இந்த வுருவம் எனது தகப்பனாரே என்று துணிவதற்கு என்ன தடை?

நானென் தகப்பனாரைநோக்கி 'தந்தையே! நீர் என் தந்தை யென்பதை நானறிகிறேன். ஆயினும் பூரணநம்பிக்கை யுண்டாகவில்லை. இறந்துபோன நீர் இப்போது எப்படி வரக்கூடும்?' என்றேன். அவர் பதில் சொல்ல முயன்றார். அம்முயற்சி அவரது மரணசமயத்தி லிருந்தது போலவே இருந்தது. அவரது உருவத்தையும் நாங்கள் பேசுவதையும் சபையிலிருந்த யாவரும் கண்டும் கேட்டும் இருந்தனர். பிறகு நாங்களிருவரும் தாராளமாகப் பேசும்பொருட்டு எங்களைத் தனியேவிட்டு மற்றவரனைவரும் வெளியே போயினர்.

என் தகப்பனார் என்னைப்பார்த்து என் பிரிவாற்றாமையைக் குறித்துச் சிலபேசியபின், பின்வருமாறு கூறினார்:

'குழந்தாய்! நான் உன்னை என் மரணசமயத்தில் பார்த்ததைவிட இப்போது நீ சுகமாயிருக்கக் காண்பதுபற்றிச் சந்தோஷிக்கிறேன். இன்றிரவு நான் உன்னுடன் பேசியதாக உனது தாயாருக்குத் தெரிவி; உன் சகோதரி மிகவும் சந்தோஷமாயிருப்பதாகவும் சொல். நான் நெடுநேரம் இங்கிருக்கக்கூடாது. இறந்தபின் எந்த இடத்திலிருந்து நான் இப்போது இங்குவந்தேனோ அந்த இடத்திற்கு விரைந்து செல்லவேண்டும். நமது குடும்பசம்பந்தமான பத்திரங்களைப்பற்றி நான் உன்னிடம் பேசமுயன்றபோது அப்பேச்சு பூர்த்தியாவதற்குள் பாரிசவாயுவால் பீடிக்கப்பட்டு

மௌனமுற்ற விஷயம் உன் ஞாபகத்திலிருக்கும். இதற்காக நான் என்னையே நொந்துகொண்டேன். கடவுள் கிருபையால் நான் உனக்கு இப்போது அச்சங்கதிமுற்றுஞ் சொல்ல அனுகூலமாயிற்று. நான் தெரிவிப்பதை ஜாக்கிரதையாகக் கவனிப்பாயாக. நமது ஊரிலுள்ள ஸ்டிராண்ட் (Strand) என்னுமிடத்தில் கோயிலுக்கருகே குறுகிய வீதியொன் றிருக்கிறது. அந்த வீதியின்பெயர் எனது ஞாபகத்திற்கு வரவில்லை. 50-வருஷங்களுக்குமுன் நான் அங்கிருந்தேன். அந்த வீதியில் இடது கைப்பக்கம் டேவிஸ் அண்ட் ஸன்ஸ் (Davis and Sons) கம்பெனி ஒன்றுண்டு. அது வக்கீல்க (Solicitors) ளுடையது. அந்தக் கம்பெனியின் பெயர் ஒரு பித்தளைத் தகட்டில் செதுக்கப்பட்டுக் கட்டிடத்தின் முன்புறம் மாட்டப்பட்டிருக்கிறது. அவர்களிடம் அப்பத்திரங்க ளிருக்கின்றன. அவற்றை நீ பெற்றுக்கொள். நான் இந்தவிஷயத்தில் அஜாக்கிரதையா யிருந்ததற்காக என்னை நீ க்ஷமிக்கவேண்டும். நான் இன்னும் அதிகமாகப் பேச இப்போது முடியாது. நேரமாய்விட்டது. இங்குள்ளவர்களின் சகாயத்தால் நான் இங்குவரவும் உன்னைக்கண்டு பேசவும் நேர்ந்தது. அவர்களுக்கு நான் வந்தனஞ் செய்கிறேன்' என்றார்.

நான் அவரை மீண்டும் பார்த்து 'பிதாவே! நானிங்கிருப்பது உமக்கு எப்படித் தெரியும்? என்று கேட்டேன். அதற்கு அவர் 'குழந்தாய்! அது எனக்குத் தெரியாது. நான் இறந்ததுமுதல் உனக்குத் தெரிவிக்கவேண்டுமென்கிற விஷயத்தைத் தெரிவியாமலே இறந்ததுபற்றிய எண்ணம் என்னை வருத்திக்கொண்டே யிருந்தது. அதுவிஷயமாகக் கடவுளைப் பிரார்த்தித்தபடி யிருந்தேன். கடவுள், பிரார்த்தனைக்கிரங்கி யருள் புரிகிறார் என்பது உலக மறிந்ததல்லவா? எப்படியோ இன்றிரவு நானிங்குவர நேர்ந்தது. அது எனக்கே விளங்கவில்லை. உன் முகத்தைத் தன்னிடங்கொண்ட ஒரு ஜோதியின் கிரணத்தைப் பின்பற்றியபடியே நான் இங்கு வந்ததாகப் புலப்படுகிறது. இவ்வளவுதான் எனக்குத் தெரியும்' என்றார்.

அதன்பின் நான் அவரைநோக்கி 'பிதாவே! நீர் என்னுடன் மறுபடியும் பேசுவதாயிருந்தால் நான் பிரதி இரவும் இங்கு வருவேன்' என்றேன். அவர் 'இல்லை. நான் செய்யவேண்டிய வேலையைச் செய்துவிட்டேன். நான் மறுபடியும் உன்னிடம் வருவேன். அது எப்போது என்பதுமட்டும் இப்போது என்னால் சொல்லமுடியாது. மரணத்திற்குப்பின் நமதுநிலைக் கேற்படக்கூடியதோர் அத்தாட்சியை நான் இப்போது உனக்கு நிரூபித்தேன். இத்தகைய அத்தாட்சியை நான் ஒருபோதும் காட்டினதேயில்லை. நன்றியுள்ளவனுயிரு. ஒன்றைப்பற்றி அதிகமாகக் கேட்பதால் ஒருவன் எல்லாவற்றையும் அடிக்கடி இழந்துவிடுகிறான். நான் விடை பெற்றுக்கொள்ளுகிறேன். கடவுள் உன்னை ஆசீர்வதிப்பாராக' என்று சொல்லி மறைந்துவிட்டார்.

மறுநாள்காலை நான் டேவிஸ் கம்பெனியின் இருப்பிடத்தைத் தேடத் தொடங்கினேன். ஸ்டிராண்ட் என்னும் இடத்திலிருந்து செயின்ட் க்ளி

மென்ட்ஸ் டேன்ஸ் சர்ச் (St. Clements Danes Church) சை அடுத்த ஹோலிவெல் வீதியில் நுழைந்தேன். தகப்பனார் தெரிவித்தபடி இடது கைப்பாரிசமாகவேசென்றேன். ஆங்காங்கு மாட்டியுள்ள பித்தளைப்பலகைகளையெல்லாம் பார்த்துக்கொண்டே போனேன். பலமுறை அவ்வீதியைச் சுற்றினேன். டேவிஸ் கம்பெனியைக் காணக்கூடவில்லை. அதனால் இவ் விஷயத்தில் எனக்கு அவநம்பகம் அதிகரித்தது. இப்படியும் என்னைப் போல ஒரு யோசனையற்ற முட்டாள் இருப்பானா என்று எனக்குள்ளேயே நினைத்துக்கொண்டேன்.

பிறகு வீட்டுக்குப்போக ஒரு குதிரைவண்டியைக் கூவியழைக்க எத்தனப்பட்டேன். உடனே ஒரு எண்ணம் உதித்தது. அதாவது என் தகப்பனார் வெஸ்ட் என்னும் இடத்திற்குப்போகும் இடதுகைப் பாரிசமான வழியைக் குறிப்பித்திருப்பார்; பட்டணத்திற்குப்போகும் இடதுகைப் பாரிசமான வழியாயிராது என்பதே. அவ்வாறே வேறு வழி சென்றேன். சிறிதுநேரத்தில் டேவிஸ் கம்பெனியைக் கண்டுபிடித்தேன். அதில் பிரவேசித்து விசாரித்ததில் எங்கள் குடும்பசம்பந்தமான பத்திரங்கள் ஒன்றும் அங்கில்லை என்று அங்கிருந்த அதிகாரிமூலமா யறிந்தேன். இம்மொழியைக் கேட்டதும் எனக்கு நாணம் அதிகரித்தது. வந்தவழியே திரும்பலானேன். திரும்பும்போது பழைய ரயிட்டர் ஒருத்தர் என்னைப் பார்த்து "யாரையா நீர்? எங்குவந்தீர்? என்ன விசேஷம்?" என்று கேட்டார். அந்த ரயிட்டர் பெயர் பெக்கர் (Becker) என்று தெரிந்துகொண்டேன். அவரிடம் எனது சமாசாரம் யாவும் சொன்னேன். அவர் "ஆம் நீர் சொல்லும் பத்திரங்களிருக்கின்றன. அவற்றை இப்போது தேடியெடுப்பது அசாத்தியம்' ஒருவாரம் பொறுத்து வாரும்" என்றார். நான் "இப்போதே அவற்றைப் பார்க்கவேண்டும்" என்று விநயமாய்ச் சொன்னேன். "முடியாது" என்றார் அந்த ரயிட்டர். நான் மீண்டும் அவரைநோக்கி "நீர் அவற்றைக் கண்டுபிடித்துக் கொடுத்தால் நான் ஐந்து பவுன் கொடுப்பேன்" என்று தெரிவித்தேன். பெக்கர் ஐந்துபவுன் என்று கேட்டவுடன் என்னைக் கொஞ்சநேரம் இருக்கவைத்து அப்பத்திரங்களை எடுத்துக் கொடுத்தார். அவற்றை நான் பெற்றுக்கொண்டு சந்தோஷமாக வீடுவந்து சேர்ந்தேன். மறு உலகம் சென்றவரோடு இவ்வுலகத்துள்ளவர் பேசக்கூடிய சந்தர்ப்பம் ஏற்படக்கூடும் என்பதில் நம்பிக்கையில்லாத எனக்கு இதில் பேராச்சரியமுண்டாயிற்று. இதை யாவருக்கும் தெரிவிக்கவேண்டுமென்றே இப்பத்திரிகையில் வெளியிடலானேன்"—என்பதாம்.

ம. இராஜகோபாலபிள்ளை, கோமளேசுவரன்பேட்டை.

---

**சந்தாதாரர்களுக்கு.**—சந்தா நம்பர் தெரியாதவர்கள் மாதமாதம் வரும் சஞ்சிகையின் மேலுள்ள விலாசத்தில் குறிக்கப்பட்டிருக்கும் சந்தா நம்பரைப் பார்த்துக் குறித்து வைத்துக்கொள்ளக் கோருகிறோம்.

# ஆத்திசூடி உதாரணக் கதைகள்.
(402-ம் பக்கத்தொடர்ச்சி)

## " இயல்பலா தனசெயேல் "

"இயல்பு அல்லாதன—(அறநூல்களிற் கூறப்படும், நீதிமார்க்கங்களுக்குப்) பொருத்தமல்லாத செய்கைகளை, செய்யேல்=(நீ) செய்யாதே" என்பது இதன்பொருள்.

உலகத்தில் மனிதராய்ப் பிறந்தவர்கள், தமக்கெனப் பெரியோர்களால் அறநூல்களில் வகுக்கப்பட்டிருக்கும் ஒழுக்கங்களைக் கைக்கொண்டு, தருமசாஸ்திரங்களுக்கு விரோதமான செயல்களை ஒழித்துவிடவேண்டும். இங்ஙனம் தீயொழுக்கங்களை ஒழித்து நல்லொழுக்கங்களைத் தழுவும் அறிஞரே இவ்வுலகத்தில் குன்றாநிதியும், நன்றாகிய வாழ்வும், பொன்றாப் புகழும் பெற்று, மேலுலகத்திலும் சிறந்தோராய்த் திகழ்வர். நீதி நூல்களுக்குப் பொருத்தமற்ற காரியங்களைச் செய்யும் புல்லர், நல்லோராகிய பல்லோராலும் பழிக்கப்பட்டு, இம்மை, மறுமை ஆகிய இரண்டிடங்களினும் இழிந்தோராய் மறைந்தொழிவர். இங்ஙனம் நீதிக்குப் பொருந்தாதவற்றைச் செய்து அழிந்தார் சரிதங்கள் பலவுண்டு; அவற்றுள் ஒன்றனை நாம் இதற்குதாரணமாக விளக்குவாம்:—

ஒரு சமஸ்தானத்தில் காரியஸ்தரொருவர் இருந்தார். அவர் புத்தியிலும், வித்தையிலும், உலக அனுபவத்திலும் சிறந்தவர்; எவ்வகைப்பட்ட உயர்ந்த காரியங்களையும் எளிதில் முடிக்கும் மதி நுட்பமுடையவர். இவ்வாறு அவர் சிறப்புற்றவராயிருந்ததனாலே அந்தச் சமஸ்தானம் மிக்க உயர்வுடையதாய் விளங்கி வந்தது. அந்தச் சமஸ்தானாதிபதியும் செல்வாக்குடையவராய் அந்தக் காரியஸ்தர்மீது அன்பு செலுத்திவந்தார். அந்தக் காரியஸ்தருக்கு அங்கே நல்ல வருவாய் கிடைத்துக்கொண்டிருந்தது. அவருடைய வாழ்க்கையும் இனிதாக நிறைவேறி வந்தது.

இவர், இவ்வாறு அந்தச் சமஸ்தானத்தில் கௌரவம்பெற்று வாழ்ந்து வருங்காலத்தில், அவ்வூரில் பொறாமைக்குணம் மிகுந்த ஒரு மனிதன் இருந்தான். அவன், அந்தக் காரியஸ்தர் செல்வாக்குடையவராய் வாழ்ந்திருப்பதைப் பார்த்துப் பொறாமைகொண்டு அவரைக் கெடுக்கும் வழிகளைப்பற்றி ஆலோசித்தான். அவனுக்கோ, தமிழை எழுத்துப்பிழையின்றி எழுதுதலும் தெரியாது; உலக அனுபவமுமில்லை; சிறந்த அறிவுமில்லை. அவன், அங்ஙனம் எதிலும் சிறவாதவனாயிருந்தும், அந்தக்காரியஸ்தரையொழித்து எப்படியாவது அவருடைய பதவிக்கு வந்துவிட விரும்பினான். அவ்விருப்பத்தால், அந்தச் சமஸ்தானாதிபதியிடம் அடிக்கடிபோய், அந்தக் காரியஸ்தர்மீது குற்றங் கற்பித்து, "அவர் படிப்பு உயர்ந்த படிப்பன்று; அறிவும் சிறந்ததன்று; நான் எல்லாவற்றிலும் சிறந்தவன்; நீங்கள் அவருடைய வேலைக்கு என்னை நியமித்துவிடுங்கள்; நான் புத்திசாலித்தனத்துடன் வேலைசெய்வேன்" என்று கோட் சொல்லிவந்தான். அந்தப் பிரபு

வுக்கு அவனுடைய இயற்கை தெரியும். அதனால் அவனை அவ்வேலைக்கு நியமிக்க இஷ்டமில்லை. அங்ஙனம் அவர் விருப்பமற்றிருந்தும் அவன் காரியஸ்தர்மீது புறங்கூறும் வழக்கத்தை நிறுத்தவில்லை. தினந்தோறும் தன் மித்திரபேத வார்த்தைகளை அவரிடம் சொல்லி அவருக்கு மிக்க தொந்தரவை யுண்டாக்கிக்கொண்டு வந்தான்.

அதனால் அவர், "இவனுக்கு அந்த உத்தியோகத்தைக் கொடுத்து இவனுடைய நடக்கையைக்கொண்டே இவன் அவ்வேலைக்குத் தகுதியற்றவனென்பதை வெளிப்படுத்தி இவனை அவமானத்திற் குள்ளாக்க வேண்டும்" என்று முடிவுசெய்து, உடனே தம்முடைய காரியஸ்தரிடத்தில், "நீர் சில தினங்கள்வரை வேலைக்கு வாராமலிருக்கவேண்டும்; நான் ஒரு காரியத்தை உத்தேசித்து, வேறொரு மனிதனை அவ்வேலைக்கு நியமிக்கப் போகிறேன்" என்று சொன்னார். அவர் மிகுந்த புத்திமானாகையால், 'பிரபு சொல்வதில் ஏதாவது முக்கியமான காரியமிருக்கும்' என்று அதற்கிசைந்துகொண்டார். மறுநாளே அப்பிரபு அந்தப் பொறாமைக்காரனை அவ்வேலைக்கு நியமித்துவிட்டார். அவன், தனக்கு உத்தியோகங் கிடைத்தவுடன் மிக்க அகங்கரிப்போடு தலைநிமிர்ந்து திரிந்தான். அங்ஙனம் அவன் காரியஸ்தனா யமர்ந்தபின் ஒருநாள் அந்தப்பிரபு தம்முடைய காரியாலயத்தில் உட்கார்ந்திருந்தார். புதுக்காரியஸ்தனும் அங்கே நின்றான்; இன்னும் பலரும் கூடியிருந்தார்கள்; முந்திய காரியஸ்தரும் வந்திருந்தார். அப்போது தெருவில் நெல் மூட்டைகள் ஏற்றப்பட்ட சில வண்டிகளைச் சில மனிதர்கள் நடத்திக்கொண்டு போனார்கள். பிரபு அவற்றைப்பார்த்ததும், புதுக்காரியஸ்தனை நோக்கி, "அந்த வண்டியிலிருப்பவை என்ன மூட்டைகள்?" என்று கேட்டார். அவன் விரைந்தோடி வண்டிக்காரரிடம் "உங்கள் வண்டிகளில் என்னமூட்டைகள் இருக்கின்றன?" என்று வினவினான். அவர்கள், "நெல் மூட்டைகள்" என்றார்கள். காரியஸ்தன் அங்கிருந்தோடி வந்து பிரபுவிடத்தில், "நெல்மூட்டைகள்" என்று சொன்னான். பிரபு, "அவற்றை அவர்கள் எங்கிருந்து கொண்டு வருகிறார்கள்?" என்று கேட்டார். காரியஸ்தன் மீண்டும் விரைந்தோடி வண்டிக்காரரிடம், "நீங்கள் இவற்றை எங்கிருந்து கொண்டுவருகிறீர்கள்?" என்றான்; அவர்கள், "நாங்கள் வடசேரியி லிருந்துகொண்டு வருகிறோம்" என்றார்கள். காரியஸ்தன் பிரபுவிடம் ஓடிவந்து; "அவர்கள் வடசேரியி லிருந்துகொண்டு வருகிறார்கள்" என்றான். பிரபு, "அவைகளை எங்கேகொண்டு செல்கிறார்கள்?" என்றார். காரியஸ்தன் மீண்டும் விரைந்தோடி நெல்மூட்டைகளைக்கொண்டு போவாரிடத்தில், "எவ்விடத்திற்குக் கொண்டு போகிறீர்கள்?" என்று வினவினான். அவர்கள், "நாகர் கோவிலுக்குக் கொண்டு செல்கிறோம்" என்றார்கள். காரியஸ்தன் திரும்பிவந்து பிரபுவிடம், "நாகர் கோவிலுக்குக் கொண்டுபோகிறார்கள்" என்றான். பிரபு, "அவைகள் அவர்களால் விலைக்கு வாங்கப்பட்டவையா, அவர்கட்குச் சொந்தமானவைகளா?" என்று அவனிடம் கேட்டார். அவன் திரும்பவும் ஓடி வண்டிக்காரரிடம் அவ் விவரங்

களை வினவினன். அவர்கள், "அவை எங்களால் விலைக்கு வாங்கப்பட்டவை" என்றார்கள். புதுக்காரியஸ்தன் திரும்பிவந்து பிரபுவிடம் "அவை விலைக்கு வாங்கப்பட்டவை" என்றான். அதன்மேலும் பிரபு "அவர்கள் அவற்றை ரூபா ஒன்றுக்கு எத்தனை படி விகிதம் வாங்கினார்கள்?" என்றார். புதுக்காரியஸ்தன் அப்போதும் அயர்ச்சியடையாமல் விரைந்துபோய் மூட்டைக்காரரிடம் அவ்விவரத்தையும் கேட்டான். அவர்கள் "ரூபா ஒன்றுக்குப் பத்துப்படிகள் விகிதம் அவற்றை வாங்கினோம்" என்றார்கள். காரியஸ்தன் மீண்டோடிவந்து பிரபுவுக்கு அவ்விவரத்தையும் கூறினன். அதற்கு மேலும் பிரபு அவனைச் சும்மாவிடவில்லை. "அவற்றை விற்கக் கொண்டுபோகிறார்களா, சொந்த உபயோகத்திற்குக் கொண்டு போகிறார்களா?" என்றார். காரியஸ்தன் மீண்டும்போய் இவ்விவரங்களையும் வண்டிக்காரரிடம் கேட்டான்; அவர்கள் "விற்கக் கொண்டுபோகிறோம்" என்றார்கள். அவன் திரும்பி யோடிவந்து அவ்விவரத்தையும் பிரபுவுக்குக் கூறினன். பின்னரும் பிரபு "ஒரு ரூபாய்க்கு எத்தனை படி விகிதம் விற்பார்கள்?" என்றார். இந்தக் கேள்வி பிறப்பதற்குள் வண்டிகள் நெடுந்தூரம் போய் விட்டன. காரியஸ்தன் மீண்டும் விரைந்தோடி வண்டிக்காரரிடம் இக் கேள்வியைக் கேட்டான். அவர்கள், "ஒன்பதுபடி விகிதம் விற்போம்" என்றார்கள். புதுக்காரியஸ்தன் அந்த விடையைக் கேட்டுக்கொண்டு மிகுந்த இளைப்புடன் திரும்பி யோடிவந்து பிரபுவிடம் சொன்னன்.

அப்போது வேறொரு மனிதன், கடலை மூட்டைகள் நிறைந்த ஒரு வண்டியை அத்தெருவில் ஓட்டிக்கொண்டுபோனன். அதைக்கண்டு அந்தச் சமஸ்தானதிபதி, புதுக்காரியஸ்தனிடம் முதலில் வினவியதைப்போலவே, பழயகாரியஸ்தரிடம் அவ்வண்டியைச் சுட்டிக்காட்டி, "இந்த வண்டியிலுள்ளவை என்ன மூட்டைகள்?" என்று வினவினர். உடனே அவர் தெருவிற்போய் அவ்வண்டியை நிறுத்தி, அதை ஓட்டிச் சென்றவனிடத்தில், பின்னர் கேட்கவேண்டியது ஒன்றுமிராமல் அம்மூட்டைகளிலிருந்த தானியம், அதை அவன் சேகரித்தவிடம், கொண்டு செல்லுமிடம், அதன் உபயோகம் முதலிய சகல விவரங்களையும் ஒரேமுறையில் கேட்டுக்கொண்டு வந்து பிரபுவிடம் சொன்னர்.

அங்குக் கூடியிருந்தவர்கள், அந்தப் பழய காரியஸ்தருடைய மதிநுட்பத்தையும், புதுக்காரியஸ்தனுடைய மூடத்தன்மையையும் பார்த்துப் புதுக்காரியஸ்தனுடைய முகத்தைநோக்கி அவனை எளனம்செய்து கைகொட்டிச் சிரித்தார்கள். உடனே பிரபு பொறுமை மிக்க புதுக்காரியஸ்தனை நோக்கி, "பேதாய்! உன்னிடம் அறிவுமில்லை கல்வியுமில்லை; கல்வியில் மிக்க அறிஞரை இகழ்ந்துரைக்கும் ஆற்றலும் பொறுமைக்குணமும் நிறைந்திருக்கின்றன; நீ ஒரே முறையில் தெரிந்துகொள்ளக்கூடிய சிறுவிஷயங்களுக்குப் பன்முறை அலைந்தாய். முன் காரியஸ்தர் அவற்றை ஒரேமுறையில் தெரிந்துரைத்தார். புத்திசாலியாயிருப்பவன், நான் மூட்டைகளின் விஷயத்தை வினவிய முதல்வார்த்தையைக் கேட்டவுடனேயே அவற்றின் முழுவிவரங்

களையும் விசாரித்துக் கூறவேண்டுமென்பதைத் தெரிந்துகொண்டு ஒரே முறையில் அவற்றைத் தெரிந்து கூறிவிடுவான். முந்தின காரியஸ்தர் மிக்க புத்திசாலியாகையால் இவருக்கு இந்நிலைமை ஏற்பட்டது. நீ அறிவற்ற மூடனாகையால் உனக்கிது ஏற்படவில்லை. இத்தகைய மூழுமகனாகிய நீ உனக்குத் தகுதியற்ற உத்தியோகத்தை விரும்பினாய். உனக்கிது பொருந்தாது'' என்று அவனைத் துரத்திவிட்டுப் பழைய காரியஸ்தரை அவ் வேலைக்கு நியமித்துக்கொண்டார். பொறாமைக்காரன் பலராலும் இகழப் பட்டு எவ்விடத்தும் சிறப்புறாதவனாய்க் கெட்டொழிந்தான்.

(தொடரும்) செம்பூர். வீ. ஆறுமுகஞ் சேர்வை.

---

## நாலடியார் வசனம்.

(403-ம் பக்கத் தொடர்ச்சி.)

### 36-ம் அதிகாரம்—கயமை (மூடரியல்பு.)

நிறைந்த அறிவினையுடையோர் வயதால் இளையவராயிருந்தாலும் தங்களைப் பாதுகாத்துப் பொறிகளை அடக்கி நடக்கச் செய்வர். அறிவில்லாதவர்கள் வயது முதிருந்தோறும் தீமையாகிய தொழிலிலேயே வருந்தித் திரிந்து கொறுக்கந் தண்டுபோல் உள்துளை யுடையவரா யிருப்பார்கள். (1)

தவளைகள் எப்பொழுதும் செழித்த பெரிய தடாகத்தில் வாழ்ந்து கொண்டிருந்தாலும், (தங்கள் உடலிலுள்ள) வழுவழுப்பாகிய அழுக்கைப் போக்கிக்கொள்ள மாட்டாவாம். (அதுபோல) குற்றமில்லாத சிறப்புடைய நூல்களைக் கற்றாலும் நுண்ணறிவு சிறிது மில்லாதவர்கள் அவற்றின் பொருளை ஆராய்ந்தறியுந் தன்மையராத லருமையாம். (2)

கூட்டமாகிய மலைகள் பொருந்திய நல்ல நாட்டையுடைய அரசனே! ஒருவருடைய எதிரிலிருந்து அவருடைய நற்குணத்தையாகிலும் சொல்வதற்கு அருமையாயிருக்க, அவரது குணம் அழியும்படி (அவர்களுக்குச்) சமீபத்தில் நின்று குற்றங்களை யெடுத்துக் கூறும் அறிவில்லாதவர்களுக்கு நாவானது (தசையினா லல்லாமல் வேறு) எப்பொருளாற் செய்யப்பட்டதோ! (3)

குலமாதர்கள் தங்கள் பெண்தன்மையைத் தாசிகள்போல் அழகு செய்து காட்டலை யறியமாட்டார்கள். விலைமாதர் புதிய வெள்ளம்போலத் தம்முடைய பெண்தன்மையைக் காட்டித் தம்மை மதித்து நடப்பர். (கீழ் மக்கள் வேசைகளைப்போல வெளியாடம்பரத்தில் கருத்துள்ளவரென்பதும், மேன்மக்கள் குலஸ்திரீகளைப்போல வெளியாடம்பரத்தில் கருத்தில்லாதவரென்பதும் இதனால் விளங்கும்.) (4)

கீழ்மக்கள், தளிரின்மேலே நின்றாலும் அடியாவிட்டால் உள்ளிறங்காத உளியின் தன்மையை யுடையவராவர். (எவ்வளவு சிறிய வேலையிலும் பிறருடைய தூண்டுதலில்லாமல் செல்லமாட்டார்க ளென்பது கருத்து.)

(மேலும்) அருளையே இயற்கைக் குணமாகவுடைய பெரியோர்க்கு எந்தச் சிறிய வுதவியையும் செய்யமாட்டார்கள். (தமக்குத்) துன்பஞ் செய்வோரைக்கண்டால் எவ்வளவு பெரிய உதவியையும் செய்வார்கள். (5)

குறவனானவன் மலையிலுள்ள வளங்களை நினைத்துக்கொண்டிருப்பான்; உழவனானவன் பயன்தந்த விளைநிலத்து வளங்களை நினைத்துக்கொண்டிருப்பான்; பெரியோர் (தமக்கு) ஒருவர் செய்த நன்மைகளை எண்ணிக்கொண்டிருப்பார்கள்; கீழ்மகன் தன்னை ஒருவன் வைததை எண்ணிக்கொண்டிருப்பான். (6)

மேலோர் தமக்கு ஒரு உதவிசெய்தவர்களிடத்தில் இடைவிடாமல் தொடர்ச்சியாகத் தோன்றிய நூறு குற்றங்களையும் பொறுத்துக்கொள்வார்கள். கீழ்மக்களுக்கு எழுநூறு நன்மைகளைச்செய்தும் ஒன்று குற்றமானால் முன்செய்த எழுநூறு நன்மைகளும் குற்றமாய்விடும். ('ஒரு நன்றி செய்தாரை உள்ளத்தேவைத்துப் பிழை நூறுஞ் சான்றோர் பொறுப்பர்'- என்பதனையும் நோக்குக. (7)

வாள் போன்ற கண்களை யுடையவளே! பன்றியானது தன் கொம்பில் அழகிய பூணைக்கட்டினாலும் கோபம்பொருந்திய யானையாதலில்லை. (அதுபோல) தரித்திரகாலத்திலும் நற்குடியிற் பிறந்தார் செய்யும் காரியங்களைக் கீழ்மக்கள் (செல்வத்தால்) உயர்நிலை யடைந்திருக்குங் காலத்திலும் செய்யமாட்டார்கள். ('செல்லாவிடத்தும் குடிப்பிறந்தார் செய்வன - செல்லிடத்துஞ் செய்யார் சிறியர்' என இந்நூலின் 15-ம். அதி. 9-ம் செய்யுளில் கூறப்பட்டிருத்தலுங் காண்க.) (8)

(இவ்வுலகத்தில்) நாம் இன்றைக்குச் செல்வமுடையராவோம்; இப்பொழுதே செல்வமுடையோராவோம்; சிலகாலங்கழித்துச் செல்வம் பெறுவோம் என்றெண்ணி யிருந்து, பொருந்தி அடுத்தடுத்துச் சொல்லுதலால் மகிழ்ச்சியடைந்து, (அதனால்) தம் மனம் வேறுபட்டுத் தாமரை யிலைபோல் இறந்தொழிந்தவர் அநேகர். (9)

நீரில் பிறந்து பசிய நிறமுடையதாயிருந்தாலும் சடையினுள் சிறிதும் ஈரம் (பற்றுதல்) இல்லையாகும். (அதுபோல) நிறைந்த பெரிய செல்வத்தில் நின்றாலும் அறுக்கப்பட்ட பெரிய பாறைக்கொப்பானவரை இவ்வுலகம் உடைத்தாயிருக்கிறது. (10)

(தொடரும்.) பூ. ஸ்ரீநிவாசன், தமிழ்ப்பண்டிதர், சித்தூர்.

---

## ஆரிய சித்தாந்தம்.

(395-ம் பக்கத் தொடர்ச்சி.)

### மந்திரம்.

பெற்ற பிதாவைக் குருவாகக்கொண்டு சாஸ்திரங்களையும் வேதங்களையும் ஓதுவதும், தெய்வமந்திரோபதேசம் பெறுவதுமே மிகுதியும் சிரேஷ்டமாம். அவர் ஒன்றும் அறியாதவராயிருந்தால் வேறு குருவை அடைய

வேண்டும். அடையும் குரு உபதேசிப்பதில் சிரத்தையுடையவராகவும் பொறுமை ஆசைகளற்றவராகவும் இருக்கவேண்டும். சற்குலத்தில் பிறந்தவராகவும் குலாசார ஒழுக்கந் தவறாதவராகவு மிருக்கவேண்டும். நற்குணமுடையவராகவும், சிஷ்யர்களிடத்தில் பிதாவைப்போன்ற பிரியமுடையவராகவும், சந்தேகங்களைத் தெளிவிப்பவராகவும், மயக்கமற்றவராகவும், இரண்டு மூன்று சாஸ்திரங்கள் பயின்றவராகவு மிருக்கவேண்டும். கோபமும் வெறுப்பு மில்லாதவரா யிருக்கவேண்டும். எல்லாக் கருமங்களும் ஒத்திருப்பது மிகவும் அருமையாதலால் பாடம் சொல்வதில் உற்சாகமும், பொறுமையும், பொருளாசையில்லாமையும், உபதேசிக்கும் வல்லமையும், விஷயங்களை எடுத்து விளக்கிக்காட்டும் சக்தியும், மாணவர்களிடத்தில் பிரியமும் உள்ளவராயிருந்தால் போதும்.

குருவும் இருவகையராவார்: இலவுகிகத்துக்குரிய இலக்கண விலக்கியங்களை உபதேசிப்பவரும், பரலோக மோட்சசாதனமான கல்வியை உபதேசிப்பவருமாவர். இந்த இகலோக பரலோகங்களுக்குரிய இருவகைக் கல்விகளுக்கும் சாதகமாயுள்ளது தெய்வபக்தி. குருபக்தியுமாம். தெய்வமும் குருவும் வேறுபட்டவரல்லர். குருபக்தி செய்வதும் தெய்வபக்தியேயாம். இலவுகிகக்கல்வியை உபதேசிப்பவரைவிட ஞானகுரு அநந்தமடங்கு உயர்ந்தவராவார். எனெனில் இலவுகிகக்கல்வி சரீரத்தைப் பருக்கச்செய்வது; ஞானம் ஆன்மாவைப் பரிசுத்தமாக்கி மோட்சத்துக்கு அருகமாக்குவது. இவற்றுக்குச் சாதகமான தெய்வபக்தி யில்லாவிட்டால் ஒன்றும் பலியாது. பூர்வஜன்ம புண்ணியபலத்தால் சித்தியாவதும் உண்டு. அது சர்வசாதாரணமல்ல. ஆதலால் மனிதர்கள் எவ்வகையிலும் தெய்வ உபாசனை செய்யவேண்டியவர்கள்.

இந்த உபாசனையும் சொரூப உபாசனை, மந்திரோபாசனை என இருவகையாம். சொரூப உபாசனை யென்பது தனது குருவின் சொரூபத்தையும், தனது குலத்தார் பரம்பரையாக ஆராதித்துவந்த தெய்வத்தின் திவ்ய மங்கள விக்கிரகசொரூபத்தையும் சதா சிந்தித்துக்கொண்டிருப்பது. மந்திரம் இந்தத் தெய்வத்துக்கு இது சொரூபமென்று வேதம் விதந்து கூறிய அக்ஷர சொரூபங்களாம். அக்ஷரம் நாதப்பிரமமாதலால் அதுவும் தெய்வத்துக்குச் சொரூபமாயிற்று. அது பஞ்சாட்சர, ஷடாக்ஷர, அஷ்டாக்ஷரங்களென்று சைவ வைணவர்களால் ஜபிக்கப்பட்டு வருவனபோல்வனவாம். "மந்த்ரம்" என்பதற்கு அஞ்ஞானாந்தகாரத்தை விலக்குவது என்பது அர்த்தம். இது தெய்வத்துக்கு வர்ணசொரூப மென்னப்படும். இந்த மந்திரத்தை முறைதவறாமல் சதாஜபிப்பதால் சர்வகாரியங்களும் சித்தியாகும். பூர்வகாலத்தில் ரிஷிகள் என்று பிரக்கியாதிபெற்றவர்கள் எல்லாரும் மந்திர ஜபத்தினாலேயே சர்வசித்திகளையும் பெற்றுச் சிறந்தார்கள்.

முன்னே கூறிய குரு இலட்சணங்கள் பொருந்திய சற்குருவைத் தேடியடைந்து பூஜித்து மந்திரோபதேசம் பெறவேண்டும். அந்தக்குருவும் தாம் சித்திபெற்ற மந்திரத்தையே உபதேசிக்கவேண்டும். சித்தியாக்கப்

படாத மந்திரம் தனக்கும் பிறர்க்கும் பயன்தாராது. அந்த மந்திரத்தை யந்திரத்துடனும் ஆராதனைக் கிரமத்துடனும் அடையவேண்டும். யந்திரம் என்பது மந்திர அக்ஷரங்களை அடைத்துப் பூஜிப்பதற்கு வரைகளினுலாகிய சொரூபமாம். மந்திராட்சரங்களை அடைத்து முறைப்படி பிராண பிரதிஷ்டைசெய்து ஆவாகனுதி ஷோடசோபசாரங்களாலும் பூஜித்து மந்திரத்தை ஜபிக்கவேண்டும். அக்ஷரலட்சம் ஜபித்தால் மந்திரசித்தி என்பர்.

ஜபிக்கும்போது அனுஷ்டிக்கத்தக்க சில விதிகளுண்டு: பிறர் செவியிற் படும்படி ஜபித்தால் பலன் தாராது. உதடுமட்டும் அசையும்படி ஜபித்தால் அது ஒருமுறை ஜபிப்பது நூறுமுறை ஜபிப்பதற்குச் சரியாகும். உதடும் அசையாமல் நாக்குமாத்திரம் அசையும்படி ஜபித்தால் ஆயிரமடங்காகும். அதையும் அக்ஷரம் அக்ஷரமாக மனதுக்குள் தியானிப்பதால் இலட்சமடங்காகும். ஜபிக்கும்போது அவ்வம்மந்திரங்களுக்கு மாலைகளைக் கொண்டு கணக்கிட்டு ஜபிக்கவேண்டும். கணக்கிடப்படும்போது பிறர் திருஷ்டியிற் படாதபடி வஸ்திரத்துக்குள் மறைத்துக்கொண்டு ஜபிக்கவேண்டும். ஜபிக்கும்போது ஜபமாலை பிறர் கண்ணில் பட்டால் பலன் தாராது. மந்திரத்துக்குரியமாலைகள் அகப்படாதபோது ருத்திராட்சமாலையைக்கொண்டு ஜபிக்கவேண்டும். ருத்திராட்சம் எல்லாவற்றுக்கும் பொதுவான மாலையாம். மாலையைத் தர்ஜனி மத்திமை விரல்களுக்கு இடையில் வைத்துக்கொண்டு அங்குஷ்டத்தால் மேல்முகமாக மணிகளைத் தள்ளவேண்டும். இப்படிச்செய்வது இகவாழ்வுக்குச் சிலாக்கியமானது. இகலோகத்திற் சிறந்தவாழ்வையும் ஐசுவரியத்தையும் கருதி ஜபிப்பவர்கள் இவ்வாறு ஜபிப்பது முறையாம். இப்படி ஜபிப்பதால் கொஞ்சநாழிகை அதிகமாகும். கீழ்முகமாகத்தள்ளுவது மோட்சத்தைக் கொடுக்கும் என்பர். இரண்டுவிதத்தையும் சேர அனுஷ்டிப்பவரும் உண்டு. எவ்வாறு என்னில் ஒருமாலையில் ஐம்பத்துநான்குமணிகள் உள்ளனவாகக் கொள்வோம். இதை ஒருமுறை மேல்முகமாகத்தள்ளி ஜபித்தால் ஐம்பத்துநான்கு கணக்காகும். நடுநாயகமணியை நீக்கிக் கீழ்முகமாக மணிகளைத்தள்ளி ஜபித்தால் இரண்டும்சேர்ந்து நூற்றெட்டாகும். இப்படி மணிகளைக் கீழும் மேலுமாகத் தள்ளி ஜபித்தால் இகபரமிரண்டுக்கும் சாதகம் செய்யுமென்பது சிலரது கருத்து. குரு எப்படி ஜபிக்கும்படி கட்டளையிடுகிறுரோ அப்படி ஜபிப்பதே சர்வ சிலாக்கியமாகும்.

எல்லா மாலைகளையும் விட அக்ஷரமாலிகை என்று ஒரு மாலையுண்டு. ருத்திராட்சமாலையைவிட அக்ஷரமாலிகை மிகச் சிறந்தது. இந்த மாலையால் ஜபிக்குங்கால் கரசரணுதி அவயவங்களுக்கும், தந்ததாலோஷ்டங்களுக்கும் வேலை வைக்கவேண்டியதில்லை. மனதாலேயே ஜபிக்கலாம். அப்போது மனம் ஒன்றுக்கே வேலையாம். அப்போது யந்திரம், குரு, ஆராதனைத் தெய்வம், எண்ணிக்கை யிவற்றிலே மனம் ஒன்றி நிற்கும். இந்த நாலுக்குள் ஒன்றில் மனம் பதிந்தாலும் மிக உத்தமமான பலன் தரும். பழக்கமதிகமானுல் மனம், யந்திரம், குரு, தெய்வசொரூபம் இவற்றுள் ஒன்

றிலேயே நிலைத்து நிற்கும். எண்ணிக்கையும் தவறுபடாது. கணக்கிட்டு ஜபிக்கப்படாத மந்திரம் பலன்கொடாது. ஆதலால் இந்த அக்ஷரமாலைக்கு மேற்பட்ட ஜபமாலை ஒன்றுமே கிடையாது. ஏனைய மாலைகளால் ஜபிக்கும் போது ஒரு இடத்தில் உட்கார்ந்துகொண்டே ஜபிக்கவேண்டும். இந்த அக்ஷரமாலையால் நடக்கும்போதும், நிற்கும்போதும் ஜபிக்கலாமென்பது மந்திரசாஸ்திரமுணர்ந்த மஹாத்மாக்களின் அபிப்பிராயம். இவ்வாறு முறை தவறாமல் ஜபிப்பவர்களுக்கு மந்திரசித்தி கைவரத் தெய்வம் பிரத்தியட்சமாகும் என்பதில் அணுவளவும் சந்தேகமில்லை. தமது வம்சபரம்பரையில் ஆராதித்துவந்த தெய்வ மந்திரமே நற்பலன் தருமென்பது பெரியோர் கருத்து.

இப்படி மந்திரசித்திபெற முயல்கிறவன் அகம்புறம் இரண்டையும் சுத்தமாக வைத்திருக்கவேண்டும். புறம் சுத்தமான நீரினாலும், அழுக்கற்ற சுத்த வஸ்திரங்களாலும் அமையும். நூல்களாலும் பெரியோராலும் கொண்டாடப்பட்ட புண்ணிய தீர்த்தங்கள் புறச்சுத்தத்துக்குச் சிறந்தவை. வஸ்திரங்களில் நாராலும், பட்டாலும் நெய்யப்பட்ட வஸ்திரங்களும், பஞ்சு நூலால் நெய்யப்பட்டு அழுக்கற்றிருக்கும் வஸ்திரமும் சிறந்தவை. காலை நடுப்பகல் இருபோதும் ஸ்நானம் செய்வது உபாசகர்களுக்குச் சிறப்பு என்பர். சிலர் மாலையிலும் வெய்யில் மறைவதற்கு முன் ஸ்நானம் செய்யலாமென்பர். வெய்யில் மறைந்தபின் முழுகுதல் ஸ்நானபலனைத் தராதென்றும் அது விழுப்புக்குச் சமானமே என்றும் நூல்கள் கூறுகின்றன. ஆதலால் மாலையிலும் ஸ்நானம் செய்து விதிப்படி மந்திரஜபம் செய்ய விரும்புகிறவர்கள் சிறிது மஞ்சள் வெய்யில் இருக்கும்போதே ஸ்நானம் செய்துவிடவேண்டும்.

அகத்தூய்மையைப்பற்றி நித்தியவிதி ஸ்நான பிரகரணத்தில் விரித்துக் கூறப்பட்டது. அது சத்தியம், பொறுமை, கபடமற்ற நிஷ்களங்க சித்தம், ஜீவகாருண்யம், இரக்கமாதி குணங்களேயாம். இந்த மானசிக ஸ்நானம் செய்து சுத்தராயிருப்பவர் புறத்தூய்மையிற் சிறிது தவறுதலுடையவராயினும் குற்றமில்லை. அந்தக் குற்றம் பஸ்மதாரணத்தாலும் சந்தியாவந்தன கர்மத்தாலும் விலகிப்போகும். மந்திர தியானாதிகள் யாவருக்கும் பொதுவேயானாலும் பிராமணர்களுக்கு முக்கியமான தர்மமென்று வற்புறுத்திக் கூறுகிறோம். பூர்வகாலத்தில் மந்திரசித்தியில்லாத பிராமணன் ஒருவன்கூட இருந்ததில்லை. எல்லாராலும் மந்திரசித்தியாக்கப்பட்டிருந்தது. அதனாலேயே ஏனைய வருணத்தார் மூவரும் பிராமணனுக்கு மரியாதை செய்து அவனுக்கு அடங்கி நடந்துவந்தார்கள். இந்தக் கற்பக விருட்சம் பிராமணன் ஒருவனிடத்தில்கூட இல்லை. அதனாலேதான் பல் பிடுங்கப்பட்ட பாம்பைப்போலப் பிராமணன் எல்லாராலும் அவமதிக்கப்படுகிறான். வேண்டாத வேறு விஷயங்களில் புத்தியைச் செலுத்திப் பயன் பெற முயல்கிறான். அது பலிப்பதில்லை. க்ஷத்திரிய சூத்திர தர்மங்களையே தானும் செய்ய விரும்புகிறான். தன் குலாசார தர்மத்தை விட்டு ஒழித்து,

பிரம தர்மபரிபாலனம்செய்ய முயலாமல் இதர தொழிலையே விடாது செய்துகொண்டு முயன்றால் பலன் எளிதில் எங்ஙனம் கிடைக்கும்?

(தொடரும்) சிவானந்த சாகர யோகீஸ்வரர்.

---

## பகவத்கீதை வசனம்.

(413-ம் பக்கத் தொடர்ச்சி.)

[பூர்வ சுலோகத்தில் ஞானம் கர்த்தா கர்மம் என்னும் மூன்றற்கும் சாத்விகாதி மூவகைத்தகைமை அறியத்தக்கதெனப் பிரதிஞ்ஞை செய்தரு ளப்பெற்றது; இப்போது முதலில் ஞானத்திற்கு மூவகைத்தகைமையை 3 சுலோகங்களால் ஸ்ரீ பகவான் நிரூபித்தருளுவர். அதன்கண்ணும் முதலில் அத்வைத ஆன்மவாதிகட்குச் சாத்விகஞானத்தைக் கூறியருளுகின்றார்.]

ஹே பார்த்த !ஒன்றற்கொன்று வேற்றுமையையுடைய எல்லாப் பூதங் களிலும் யாண்டும் வியாபக ஏக அவ்யய சத்தாரூப பாவத்தை எவ்வுணர் வாற் சாக்ஷாத்கரிப்பனோ அவ்வுணர்வைச் சாத்விக ஞானமென்றறிதி.

ஹே அர்ச்சுன ! அவ்வியாகிருத இரணியகருப்ப விராட்டு என்னும் பெயர்களையுடைய காரணசூக்கும தூலரூப சமஷ்டி வியஷ்டி வடிவ சர்வ பூதங்களும் விபக்தங்களாம்; அதாவது, வேறு வேறு நாமரூபங்களானே பரஸ்பரம் வியாவர்த்தியமும் நானாசமுமாகிய உற்பத்தி நாசமுடைய இரு சியவர்க்கரூப சர்வ பூதங்களிலும் சத்தை வடிவபாவத்தை வேதாந்த வாக் கியங்களின் விசாரத்தாலுண்டாய அந்தக்கரண விருத்திரூபஞானத்தானே அதிகாரி சாக்ஷாத்கரிப்பன்; அதாவது, அச்சர்வபூதங்களிலும் பரமார்த்த சத்தை வடிவ சுவப்பிரகாச ஆனந்த ஆன்மாவை எவ்வுணர்வாற் சாக்ஷாத் கரிக்கலாமோ என்பதாம். சத்தையாகிய பாவம் ஒன்றாம்; அதாவது, சஜா தீய விஜாதீய சுவகதபேதங்களற்றமையின் அத்விதீயரூபமாம்; அவ்யயமும் ஆம்; அதாவது உற்பத்தி விநாசாதி சர்வ விகாரங்களுமற்றதும் அதிருசிய மும் ஆம்; அவிபக்தமும் ஆம்; அதாவது, சர்வ ஜடபதார்த்தங்களின் அதிஷ் டான ரூபத்தானும் சர்வ கற்பித பதார்த்தங்களின் பாத அவதி ரூபத்தா னும் யாண்டும் வியாபகமாம்; அத்தகைய அத்விதீய ஆன்மாவை அதிகாரி வேதாந்த வாக்கிய ஜன்னிய ஞானத்தானே சாக்ஷாத்கரிப்பன். மித்தை யாகிய பிரபஞ்சத்தின் பாதக ஆன்ம ஞானத்தை நீ சாத்விக ஞானம் என்று ணர்தி. இவ்வத்விதீய ஆன்மாவின் சாக்ஷாத்காரத்தினும் வேறாகிய எத்துணைத் துவைத தரிசனமுளவோ அவையாவுமே இராஜசமாதலினானும் தாமதமாதலினானும் சம்சாரத்தின் காரணமேயாதலின் அந்தத்துவைத தரிசனத்தில் ஒருகாலும் சாத்விகத்தன்மை யுண்டாகாதாம்.

[இப்போது இராஜச ஞானத்தின் சொரூபம் வருணித்தருளப்பெறும்]

ஹே அர்ச்சுன ! மீண்டும் பரஸ்பர பேதத்தானே இராநின்ற தேகாதி சர்வ பூதங்களில் பரஸ்பர விலக்கண நானா ஆன்மாக்களின் ஞானத்தை நீ இராஜச மென்றறிதி.

கூறியருளிய சாத்விக ஞானத்தினும் இந்த இராஜச ஞானம் வேறுய தாம்; அவ்வேற்றுமை யிதுவாம்:—பரஸ்பர பேதத்தோடு மிராநின்ற தேகாதிக சர்வ பூதங்களிலும் எஞ்ஞானம் தனிவகை நானுபாவங்களைக் காணுமோ, அதாவது தேகந்தோறும் சுகித்தன்மை துக்கித்தன்மை முதலிய ரூபத்தால் பரஸ்பர விலக்ஷண வேறு வேறு ஆன்மாக்களை எஞ்ஞானங்காணுமோ; கருத்திதுவாம்:—இவ்வுலகத்தில் சிலர் சுகிகளாவர், சிலர் துக்கிகளாவர், சிலர் பண்டிதர், சிலர் மூர்க்கர் என்பதாதி அநேக வகை விலக்ஷணத் தன்மை காண வருகின்றது. ஒருகால் சர்வ தேகங்களிலும் ஒரே ஆன்மா இருக்குமாயின் ஒரு பிராணி சுகியாயின் எல்லாரும் சுகிகளாகவேண்டும். ஒரு பிராணி துக்கியாயின் யாவருந் துக்கியாகவேண்டும், ஆனால் அவ்வாறு காணுமாதலின் சர்வ தேகங்களிலும் ஏக ஆன்மா இல்லை. மற்றே, தேகந்தோறும் வேறு வேறு ஆன்மாவாம். இவ்வாறு குதர்க்கங்களாலுண்டாய ஞானம் தேகந்தோறும் வேறு வேறு ஆன்மாவைக் காண்டலின் அது இராஜசமாம். தேகந்தோறும் ஆன்மாக்களின் பரஸ்பர பேதம், ஆன்மாக்கட் கீசுரபேதம், ஆன்மாவிற்கும் ஜடவர்க்கங்கட்கும் பேதம், ஈசுர ஜடவர்க்கங்கட்கும் பேதம், ஜடவர்க்கங்கட்குப் பரஸ்பர பேதம், என இவ்வாறு அநௌபாதிக பஞ்ச பேதங்களை விஷயீகரிக்கும் தார்க்கிகரின் ஞானம் இராஜசமே யெனவறிக.

[தாமசஞான சொரூபத்தை வருணித்தருளல்]

ஹே அர்ச்சுன! எந்த ஞானம் ஏதாவது ஒருகாரியத்தில் பரிபூரண அருத்தத்தைப்போல அபிநிவேசமுடையதாமோ, ஊகமற்றதாமோ, பரமார்த்தப் பற்றற்றதாமோ, அற்பமாமோ; அந்த ஞானம் ஆன்றோரால் தாமசமெனப்பெறும்.

ஹே கௌந்தேய! முன்னர் மொழிந்த இராஜசஞானத்திலும் இத் தாமதஞானம் அயலாம். அவ்வேற்றுமை:—ஆகாசாதிகளின் காரியங்கள் இருந்தபோதினும் அவ்வியாவற்றினுள்ளும் ஒருதேகரூபகாரியத்தில், அல்லது பிரதிமைமுதலிய காரியத்தில் எந்தஞானம் பரிபூர்ண அர்த்தத்தைப் போலச் சக்தமோ, அதாவது இவ்வளவுமாத்திரமே ஆன்மாவாம்; இவ்வளவுமாத்திரமே ஈசுரராம்; இதனினும் வேருக ஓரான்மாவேனும் ஓரீசுரரேனும் இல்லை என்னும் அபிநிவேசத்தானே எஞ்ஞானம் ஒரு தேகரூப ஏககாரியத்தில், அல்லது பிரதிமாதிரூப ஏககாரியத்திலே யினிது பொருந்துவதாமோ, ஆன்மா அவயவத்தோடு கூடியதாம்; தேகபரிமாணமாம் என்னும் திகம்பராது ஞானம்; இத்தூலதேகமே ஆன்மாவென்னும் சார்வாகரின் ஞானம். பாஷாணகாஷ்டாதிரூப இப்பிரதிமைமாத்திரமே ஈசுரர் இதனினும் மேலாக வேறு ஈசுரர் இல்லையென்னும் சாஸ்திர சமஸ்காரமற்ற மூடர்களின் ஞானம் என்பனவைபோலுமென்க. எஞ்ஞானம் உற்பத்திரூப ஹேதுவற்றதாமோ, அதாவது தேகப்பிரதிமையினும் வேருக மற்றெத்துணைப் பூதகாரியங்களுளவோ, அவற்றுள் ஆன்மத்தன்மை யின்மையதும், ஈசுரத்தன்மையின்மையதும், ஆகிய பூதகாரியதேகத்தில் ஆன்மத்

தன்மை யெங்ஙனஞ் சம்பவிக்கும், பூதகாரியப்பிரதமையின் கண்ணே ஈசுரத்தன்மை எங்ஙனஞ் சம்பவிக்கும், சம்பவியாதாம் என இவ்வாறு எஞ்ஞானம் ஆராய்ச்சியற்றதாமோ, இக்காரணத்தானே எஞ்ஞானம் அதத்வார்த்தவத்தாமோ, பிரமாணாந்தரத்தாற் பாதிதமல்லாத அர்த்தம் தத்வார்த்தமாம், அது எதற்குவிடயமன்றுமோ அது அதத்வார்த்தவத்தாம், அதாவது எஞ்ஞானம் அயதார்த்த அர்த்தவிஷயகமாமோ எஞ்ஞானம் அற்பமோ, அதாவது ஆன்மாவின் நித்தியத்வ விபுத்வங்களை விடயஞ்செய்யாமையின் யாதுமுற்றினும் அற்பமாமோ, இவ்வாறு அநித்திய பரிச்சின்ன தேகாதிகளிடத்தில் ஆன்மத்தன்மை யபிமான வடிவ சார்வாகாதிகளின் ஞானமாமோ, எஞ்ஞானம் ஆத்மா ஈசுராரிரண்டும் நித்தியம் விபுதேகாதி சங்காதத்தினும் வேறென்னும் தார்க்கிகபுருடர்களின் ஞானத்தினும் அத்தியந்தம் விலக்ஷணமாகிய அந்த ஞானம் மதிமான்களால் தாமத ஞானமெனப்படும்.

[ஏக அத்விதீய ஆன்மாவை விடயஞ்செய்யும் உபநிடத சம்பந்திகளின் சாத்விகஞானமே முமுக்ஷுக்களாற் கவரத்தக்கதாம், நித்திய விபு பரஸ்பரபின்னமாகிய அநேக ஆன்மாக்களை விடயஞ்செய்யும் துவைததரிசிகளாய தார்க்கிகர்களின் இராஜசஞானம்; அநித்தியபரிச்சின்ன தேகாதிரூப ஆன்மாவை விடயீகரிக்கும் சார்வாகாதிகளின் தாமசஞானம், என்னுமிரண்டும் முமுக்ஷுக்களானே விடத்தக்கனவாம். இப்பொருள் முன்னர் அருளப்பெற்றது. இப்போது ஸ்ரீ பகவான் சாத்விகாதிபேதத்தானே கருமத்தின் மூவகைமையைக் கூறியருளத் தொடங்கியவற்றுள் ஆதியில் சாத்விககரும சொரூபத்தை வருணித்தருளல்]

ஹே பார்த்த! பயன்விழைவு பற்றுதவன் பண்ணுகின்ற சங்கமற்ற விருப்பு வெறுப்பு அற்ற நித்தியகருமம் சாத்விகமெனப்பெறும்.

ஹே அர்ச்சுன! யாது நியதமாமோ, அதாவது அக்கருமத்திற்கு எத்துணைத்திரவியம் தேவதை மந்திரம் முதலிய அங்கங்கள் உளவோ அவை யாவற்றையும் நிறைவிப்பதிலாற்றலற்றவருக்கும் எக்கருமந் தன் பயனை யொருதலையா யடைவிக்குமோ, அத்தகையது அக்கினிஹோத்திராதி நித்தியகருமமாம்; எக்கருமம் சங்கரகிதமாமோ, யானே பெரிய மகஞ் செய்பவனுவேன் எனக்கொப்பாக எவருமேயில்லை யென்பதாதியபிமான ரூப அகங்காரமெனப் பெயரிய இராஜச கர்வவிசேடம் சங்கமாம். அச்சங்கமற்ற, அதாவது எக்கருமம் இவ்வாறுய அபிமான பூர்வகம் செய்யப்பட மாட்டாதோ, அஞ்ஞானம் இருக்கும்வரை கர்த்திருத்வ போக்திருத்வப் பிரவர்த்தகமாய அகங்காரம் சாத்விகபுருடரிடத்து மிருக்கும்; அவ்வஞ்ஞானமும் அகங்காரமும் அற்ற தத்துவஞானிக்கோ கருமங்களின் அதிகாரமே யின்றும், என்பது முன்னர் அனேகமுறை கூறப்பெற்றதாதலின் சாத்விகனிடத்தில் கர்த்திருத்துவ போக்திருத்துவப்பிரவர்த்தக சாமானிய அகங்காரமிருப்பினும் அந்த இராஜச கர்வரூபவிசேஷ அகங்கார மிருப்பதில்லை. எக்கருமம் இராகத்துவேடமின்றிச் செய்யப்படுமோ, இக் கரு

மத்தால் யான் அரச சன்மான முதலியவற்றை யடைவேன் என்னும் அபிப்பிராயம் இராகமாம், இக் கருமத்தால் யான் சத்துருவை ஜயிப்பேன் என்னும் அபிப்பிராயம் துவேஷமாம், இவ் விரண்டால் எக்கருமஞ் செய்யப் பெருதோ, இங்ஙனமே யாகதான ஹோமாதிரூப நித்திய கருமம் பலேச்சையின்றி நிட்காமனால் தன் றருமமென வெண்ணிச் செய்யப்படு மேல் சாத்விக கருமமெனப்படும். [இப்போது இராஜச கருமத்தின் வடிவம் வருணித்தருளப்பெறும்.]

ஹே அர்ச்சுன! சகாமபுருடனால் அகங்காரத்தோடு கூடியவனால் நியதமின்றிக் கிலேசமிகத்தரக்கூடிய எக்காமியகருமம் செய்யப்படுமோ அது ஆன்றோரால் இராஜசகருமமெனப்படும்.

ஹே கௌந்தேய! முன்மொழிந்த சாத்விககருமத்தினும் இந்த இராஜசகருமம் விலக்ஷணமாம்:—சுவர்க்காதிபலத்தை விரும்பிய சகாமன் முற்கூறிய சங்கரூபகர்வத்தோடுகூடியவன் எக்காமியகருமத்தைச் செய்கின்றனே எக்கருமம் மிகவும் ஆயாசத்தோடதாமோ, அதாவது சர்வாங்கமும் நிறைவுறச்செய்வதாகிய காமியகருமம் பலத்தையடைவிக்கும், சிறிதுமாத்திரம் அங்கத்தின் விகுணத்தன்மையையடைந்த காமியகருமம் பல வேதுவாகாதாமாதலின் சர்வாங்கம் நிறைவிக்கக் கர்த்தாவிற்கு அது மிகக் கிலேசத்தைத்தரும். இராஜசகருமத்தில் அநியதத் தன்மையுளதாம், நித்திய கருமத்தி லெப்போதும் கர்த்தவ்யத்தன்மையாமாறுபோலக் காமியத்திலாகாதாம், மற்றே, பல இச்சையிருக்கும் பரியந்தமே காமியகருமத்தின் கர்த்தவ்யத்தன்மையிருக்கும். ஆசை யகன்றபின் காமியத்தின் கர்த்தவ்யத்தன்மை இராஜதமாதலின், அதன்கண் அநியதத்தன்மை பொருத்தமுடையதேயாம். இக்காமியகருமம் ஆன்றோரால் இராஜசகருமமெனப்பெறும், ஈண்டுச் சர்வவிசேஷணங்களானே இதில் பூர்வம் புகன்ற சாத்விகமருமத்தின் எல்லாச் சிறப்பானும் விபரீதத்தன்மை கூறியருளப்பெற்றதாம்.

[இப்போது தாமத கருமத்தின் சொரூபம் வருணித்தருளப்பெறும்]

ஹே அர்ச்சுன! அநுபந்தத்தையும் க்ஷயத்தையும், ஹிம்சையையும், பௌருஷத்தையும் விசாரித்துக் கேவலம் அவிவேகத்தானே எக்கருமம் தொடங்கப்படுமோ அது தாமசகருமமெனப்படும்.

ஹே பார்த்த! இனியாகும் அசுபபலம் அநுபந்தம் எனப் பெறும். தேக ஆற்றலுக்கும் தனத்திற்கும் சேனைக்கும் விநாசம் க்ஷயமாம். பிராணிக்குறும் பீடை ஹிம்சையாம். தனது ஆற்றல் பௌருஷமாம். இந்நான்கையும் கருமம் தொடங்குவதற்குமுன் ஆராயாது கேவலம் அவிவேகரூபமோகவயத்தால் தொடங்கப்படுங் கருமம் தாமசமெனப்பெறும். துரியோதனன் அனுபந்தாதி நான்கையும் ஆராயாது கேவலம் அவிவேக ரூப மோகத்தா லிப்போரைத் தொடங்கியிருப்பதுபோலுமென் றறியலாம்.

(தொடரும்) சீடன்.

# நல்லுரைத் திரட்டு.

(1) கடவுள் ஒருவருண்டு. அவர் அரூபியாய்ச் சத்திமயமாய் மிளிர்கிறார். நாம் நமது நித்தியகருமங்களில் எதை மறப்பினும், செய்யாதொழியினும் கடவுளை என்றும் உள்ளன்போடு வணங்காதிருத்தல் கூடாது. (2) கடவுள் வணக்கமில்லா எந்த நூலையும் படித்தல் கூடாது. (3) பெற்றோரினுஞ் சிறந்த உற்றார் எவருமிலர். ஆன்றோர் "பெற்றோரே முதற் கடவுள்" என்பர். எனவே, நாம் நமது பெற்றோர்க்கு மனக்கசப்பையளிக்கத் தக்கவழியில் செல்லுதல் கூடாது. அவர்கள் இன்புறுவதையே நமது செய்கையாகக் கொள்ளல் வேண்டும். (4) நமது பெற்றோர், குரு, அறிஞர், மூத்தோர் முதலாயினோர் கூறும் நீதிகளின்படி நடத்தல் வேண்டும். (5) உண்மை பேசுவோரின் வாழ்க்கை எந்நாளும் இன்பமாகவேயிருக்கும் (6) பிறர்க்காகப் பாடுபடுபவரே தமது பொறுப்பை ஏற்று நடப்பவராவர். (7) மௌனமே கலகமற்றது — பாபநாசமானது — இன்பத்தையளிப்பது. (8) மனிதன் "அறிவிலி" யென்று நூறாண்டு உலகில் திரிந்துழல்வதினும் "அறிஞன்" என ஒரு தினம் வாழ்வதே சாலவுஞ் சிறந்தது. (9) "அன்பி" னால் உலகை வசீகரிக்கலாம். (10) எளிய வாழ்க்கையிலிருப்போரே கவலையற்றவர்கள். (11) யார் யார் எது எதைச் செய்கிறார்களோ அவரவர் அது அதையே பெறுவார்கள். (12) தானாண்மையுள்ளவர்களே பேரறிஞர். (13) தீமைக்கஞ்சி விலகுவோர் அறிஞர். (14) வறிஞரை அறிந்து அவர்க்குத் தர்மம் செய்வதே புண்ணியம். (15) நீங்காத சாந்தமுள்ளவர்கள் "மகாத்மாக்கள்." (16) தாழ்மையாலேயே நீங்காக் கீர்த்தியைப் பெறலாம். (17) பொருளைத் தேடுதலினும் அறிவைத் தேடுதல் நலம். (18) அகந்தையே அழிவின் அறிகுறி. '19) "இன்சொல்" லால் எல்லாரையும் நம் சொற்படி நடக்கச்செய்யலாம். (20) பலவானிலும் அறிவாளியே மேலானவன். (21) வஞ்சித்துச் சேர்த்த பொருள் கொஞ்சநாளில் போய்விடும். (22) சற்குணரைக் கண்டிக்க ஒருவார்த்தை போதும். துற்குணரைக் கண்டிக்க எதனாலு மியலாது. (23) எச்சரிக்கையுள்ளவனுடைய சிந்தனை செல்வத்திற்கும், பதறுகிறவனுடைய சிந்தனை அழிவிற்கும் அறிகுறிகள். (24) தர்மஞ்செய்கிறவர்க்கு, எல்லாரும் சிநேகராகிறார்கள். (25) உத்தம சிநேகன் எக்காலமும் பிரியான். (26) கடவுளுக்கு விரோதமான ஞானமில்லை. (27) ஒருவன் மூடனென்று அறிந்தும், அவனுக்குப் புத்தி சொல்லுகிறவன், அவனிலும் "பெரிய மூடன்". (28) தாய்மொழியை நன்குகற்றவரே பிறமொழிகளைப் பயின்று கீர்த்தியடையலாம். (29) அறிவில்லாதவர்கள் "நியாயம்" இன்னதென அறியார்கள். (30) திக்கற்றவர்களுக்கு நம்மால் எவ்வளவு உதவி செய்யக்கூடுமோ அதைச்செய்தல் நலம். (31) சகிப்புத்தன்மை யுடையோரே பொறுமைசாலிகள். (32) நம்மிடம் உள்ள குற்றங்களைக் கடிந்து கூறுவோரின் புத்திமதியை நாம் அவசியம் கேட்டு நடக்கவேண்டும். (33) அந்தணரிலும் கீழோருண்டு. கீழோரிலும் அந்தணருண்டு. ஒருவர் பிறப்பினால்

மட்டும் அந்தணராகார். (34) சிலவதை செய்தலைக்கண்டு அஞ்சி, கூடு மானல் விலக்க முயலுதலே அருளுடையார் செய்கை. (35) காலத்தி னருமை தெரிந்து நடவாதவரே "குருடர்." (36) எம்மதமும் சம்மதம் என்ற பொருளறிந்தவரே மதத்தை யறிந்தவர். (37) சூதாடுவோர், தமது கௌரவம், செல்வம் முதலியவற்றை இழக்கிறார். (38) தமது குற்றத் தைக் கடவுள் முன்னிலையில் வெளியிட்டு மன்னிப்பைக் கோருவோர், மன் னிப்பையும் கீர்த்தியையும் பெறுகிறார். (39) தீயோர் நட்பு பாம்பை யொக் கும். பாம்பிற்குப் பால்வார்த்து அதனை அன்பாய் வளர்த்துவந்தாலும், அது வளர்ப்போரை என்றாயினும் தீண்டுதல் உண்மை. அதேவாறு தீயோர்க்கு ஒருவர் எவ்வளவு நன்மைசெய்யினும் அவர் தம்முடைய தீய குணத்தினின்று விலகுதல் அருமை. (40) உலகிலுள்ளவர்களில், பலர் நமக்குப் புத்திபோதிப்பார்கள். அவர் போதனைகளில் நல்லனவுமுண்டு தீயனவுமுண்டு. அவற்றுள் நல்லவற்றைமட்டும் கிரகித்துக்கொள்ளவேண் டும். "உலகம் பலவிதம்." (41) கள்ளுண்டல் நன்மைதீமையைப் பகுத் தறியும் அறிவைமயக்கி அதுபயக்கும் ஒழுக்கத்தைக் கெடுத்தலால், பாவத் தின்தலை யாகிறது. (42) கண்டவிடத்தில் முகமாத்திரம் மலரும்படி சிநே கிப்பது சிநேகமன்று. அன்பினால் உள்ளமும் மலரும்படி சிநேகிப்பதே சிநேகமாகும். (43) செய்ந்நன்றியை மறப்பவருக்கே நரகத்தில் இடம் விசாலமாயிருக்கிறது. (44) திரவியம் சம்பாதித்தற்கு முயற்சியே மூல தனமாகும்.

திரு. வீ. மு. பொன்னையா.

---

## சந்தாநேயர்களுக்கு விஞ்ஞாபனம்.

அடுத்த 12-வது ஸஞ்சிகை முதல் நம் ஆனந்தபோதினியின் சஞ்சிகைகள் 6-பாரங்கள் (48-பக்கங்கள்) உள்ளனவாய் வெளிவரும். இன்னும் சந்தாதா ரர்கள் இதர நண்பர்களையும் சந்தாதாரராகச் சேர்த்தும், வேறுபல உதவி களைப் புரிந்தும் வருவார்களாயின் இன்னும் இப்போதினி உயர்ந்த விதத் தில் வெளிவருதல் கூடும்.

---

## உபாத்திமைத் தொழிலும் அதன் சிரமமும்.

ஸ்ரீமான் சி. இராஜகோபாலாச்சாரியார் அவர்கள், ஆமதாபாத் முனிசி பல் பெண்பாடசாலையைப் பார்வையிட்டபொழுது உபாத்தியாயனிகள், நூல் நூற்குந்தன்மையைக் காட்டினார்களாம். அதைக்கண்டு சந்தோஷித்த அவர், பள்ளியில் போதிக்கும் போதும் நூல் கதரினால் நூற்றுக்கொண் டிருக்கும்படி புத்தி சொன்னாராம்.

"உபாத்தியாயனிகள் நூற்பது நல்லதுதான். குழந்தைகளுக்கு அதைக் கற்பிப்பதும் நல்லதே. ஓதுவிக்குங்கால் நூற்பது முடியாத காரி யம். நடந்துகொண்டே படிப்பதென்பதுகூட, புத்தியை முழுதும் படிப்ப தில் செலுத்த முடியாத காரியம். நாமே படிப்பதைக்காட்டிலும் போதிப்

பது அதிக கவனம் செலுத்தவேண்டிய காரியம். கேள்வி கேட்பதும், அதன்பின் பிள்ளைகளோ பெண்களோ பதில் சொல்லுவதிலிருந்து சரியான முடிவுக்கு வரும்படி அவர்களை வாக்கு சாமர்த்தியத்தால் படிப்படியாய் அழைத்துச் செல்வதும், மற்றொரு காரியத்தோடு சேர்த்துச் செய்யக்கூடிய வேலையன்று. ஸ்ரீமான் இராஜகோபாலாச்சாரியார் கதர் உற்பத்தியின் ஆசைப்பெருக்கால் இந்த விஷயங்களை மறந்திருப்பாரென்றே நினைக்கவேண்டியிருக்கிறது" என்று சுதேசமித்திரன் தனது 9—4—26 குறிப்புகளொன்றில் குறிப்பிட்டிருப்பது மிகவும் கவனிக்கத்தக்கது.

என்ன, உபாத்தியாயர் வேலைதானே என்பவர்கள், இதனை ஆழ்ந்து கவனிப்பார்களாக. டாணா வேலையென்று தாழ்மையாய்ப்பேசும் அறிவிலிகளும் இத்தொழிலிலுள்ள சிரமத்தை ஓர்ந்து அறிவுள்ளவர்களாவார்களாக. படியுங்கடா எழுதுங்கடா என்று சொல்லிக்கொண்டு உட்கார்ந்திருக்கும் இது, மகாப்பிரமாதமான வேலையோ என்று இகழும்—ஏளனம் செய்யும் மாண்புடையோரின் மண்டையிலுள்ளது மண்ணோ வென்று யோசித்து, மூளையுள்ளவரென்று எவரும் இயம்பும்படி விளங்கத் தங்களறிவைச் சீர்திருத்திக் கொள்வார்களாக.

தூத்துக்குடியில் 14-4-26ல் நடந்த, கால்ட்வெல் உயர்தரக் கல்லூரி ஆசிரியர் சங்கத்தின் 8-வது நிறைவு விழாவில் 'தேசியவாழ்வில் ஆசிரியர்கள்' என்ற விஷயமாய் உபந்நியசித்த ஸ்ரீமான் எஸ். டி. கிருஷ்ணய்யங்கார் அவர்கள், பிரதம ஆசிரியர்தாம், பஞ்சம் நாட்டை விட்டுத் தொலையவும் தேசம் நன்னிலைமைக்கு வரவும் வெகுவாகக் கவனித்துப் பாடுபடவேண்டும் என்றும், தற்கால சீர்கேட்டிற்குக் காரணம் கல்விமுறையேயென்றும் கூறியிருப்பதைக் கல்வி விருத்தியின் அபிமானிகள், நிர்வாகிகள் என்போர் மிகவும் கவனித்து, ஆசிரியர்கள் தேசம் முன்னேறும் வழியில் போதிக்க—உழைக்க, யாதொரு கவலையும் இல்லாதவர்களாய் இருக்க வேண்டியது அத்தியாவசியம் என்பதையும் அதற்கேற்ற ஆதரவுகள் ஆரம்ப ஆசிரியர்களுக்கு அளிக்கவேண்டிய அவசியத்தையும் நன்குணர்ந்து அதற்கேற்ற உதவிகளைச் செய்வார்களாக.

கல்வி முறையில் நாட்டிற்கியன்றதை, அநுபவசாலிகளாகிய ஆரம்ப ஆசிரியர்கள் அறிவிக்குமாறும், அதைக்கேட்டு அநுசரிக்கச் செய்யுமாறும், ஆரம்ப ஆசிரியர்களுக்குக் கல்விஸ்தாபனங்களில் இடம் கிடைக்குமாறும் செய்வார்களாக. P. பரிமணப் பல்லவராயர்.

---

## அம்பாலிகை அல்லது அதிசய மரணம்

(415-ம் பக்கத் தொடர்ச்சி.)

ஆன:—இல்லை யில்லை. அவ்விஷயத்தை எங்கள் உதவியின்றியே அறிந்து கொள்ள உன்னிடமே போதுமான ருசுக்களிருப்பதால் அஃதவசியமில்லை.

அம்:—என் மாற்றாந்தாய் புத்திரனாகிய அவன் எனக்குத் தக்க உதவியும் உபசாரமும் செய்திராவிட்டால் நான் சவப்பெட்டியிலேயே மடிந்து போயல்லவோ இருப்பேன்!

இதைக்கேட்டதே ஆனந்தவிங் கலகலவென்று நகைத்து விட்டான்.

அம்:—பாபம்! பவானி ஏமாற்றப்பட்டாள்.

ஆன:—யாரால்?

அம்:—என்னைச் சவப் பெட்டியிலேயே மடிந்து போகும்படி விட்டுவிட்டிருக்க விரும்பிய அந்த மனிதனால்.

ஆன:—அவன் பெயரென்ன?

அம்:அதை என் வாயால் கூறவேமாட்டேன்.

ஆன:—ஆகா! எங்கும் நடந்திராத இந்தப் படுமோசச் செய்கைகள் ஜெயம் பெறா வண்ணம் நான் தற்செயலாய் இங்கு வரும்படி கோர்ந்ததற்காக நீ கடவுளைப் பிரார்த்திக்க வேண்டும்.

அம்:—நம்மிருவர் சம்பாஷணைகளும் ஒன்றுக்கொன்று நேர்மாறான அபிப்பிராய முடையவைகளா யிருக்கின்றன.

ஆன:—நீ கூறுவது உண்மையே. உன் விவகாரங்களில் இன்று நான் செய்யும் உதவிக்காக மெய்யாகவே நீ உன் ஆயுள் முழுமையும் நன்றி பாராட்டப்போகிறாய். கறுப்பண்ணனை யுண்மையானவனென்று நீ நம்புவதால் மிக்க யோக்கியனும் சத்தியவானும் மிக்க பெருந்தன்மை யுடையவனுமாகிய ஒருவனுக்கு அதிக அக்கிரமம் செய்கிறாய்.

அம்பாவிகை வெறுப்போடு அவனை நோக்கி, "நீ யின்னும் பவானியிட மிருந்து வந்ததாகவே கூறுகிறாயா?" என்றாள்.

ஆன:—ஆம்.

அம்:—அப்படியாயின் என்னைக்கொல்ல முயன்றமனிதனை புண்மையானவனென்று நான் நம்பும்படி யெனக்குப் போதிக்க வந்தாய்.

ஆன:—நான் இப்போது மனம்விட்டுக் கூறுகிறேன். உன்னை யார் கொல்ல முயன்றானோ அவன்மேல் தான் நீ இப்போது நம்பிக்கை வைத்திருக்கிறாய்.

அம்பாவிகை திடுக்கிட்டெழுந்து ஆனந்தவிங்கின் தோளைப்பிடித்துக்கொண்டு மிக்க ஆவலோடு "நீயார்?" என்றாள்.

ஆன:—"நான் இன்னும் மறைவிலிருக்கவேண்டிய அவசியமில்லை. என் பெயர் ஆனந்தவிங்" என்றான்.

இதைக்கேட்டதே அம்பாவிகை முகத்தில் திடீரென்று ஒருவிதப் பிரகாசமுண்டாயிற்று. ஆத்திரத்தோடு "பிரக்யாதிபெற்ற துப்பறியும் ஆனந்தவிங்கா?" என்றாள்.

ஆன:—"நான் துப்பறியும் உத்தியோகஸ்தனே. நான் எவ்வளவு பிரக்யாதி பெற்றவன் என்பதைப்பற்றிக் கூறவேண்டியது நானல்ல"வென்றான்.

அம்:—நீ கறுப்பண்ணன் மோசக்காரன் என்கிறாய்?

ஆன:—ஆம், தீரமாய்க்கூறுகிறேன்.

அம்:—உன்னைப் போன்றவர்கள் இது சந்தேகமின்றி மனதாரத் தெரிந்து இதை ருசுப்படுத்தச் சக்தி யிருந்தாலன்றி இத்தகைய விஷயங்களைக் கூறமாட்டார்களே.

ஆன:—நீ கூறுவது உண்மையே.

அம்:—கறுப்பண்ணன் இத்தகையவனாயின் என்னைக்கொல்ல முயன்றவனாகக் கருதப்படும் இன்னொருமனிதன் நிரபராதியாயல்லவோ இருக்க வேண்டும்?

ஆன:—ஆம்; சந்தேகமின்றி. அம்மனிதன் அன்று பிறந்த குழந்தை யெப்படி நிரபராதியோ அப்படி முழுதும் நிரபராதியே.

அம்:—அப்படியாயின் இதை நீ ருசுப்படுத்தக் கூடுமல்லவா?

ஆன:—ஆகா தடையின்றி.

அம்:—எப்படி? யாரைக்கொண்டு ருசுப்படுத்துவாய்?

ஆன:—அந்தக் கள்ளப்பயலாகிய கறுப்பண்ணனே யுன் முன் முழங்காற்படியிட்டுத் தான்செய்த படுமோசமாகிய சூழ்ச்சிகளையெல்லாம் ஒன்று விடாமல் ஒப்புக்கொள்ளும்படி செய்வேன்.

இம் மொழிகளைக்கேட்டதே அம்பாலிகையின் மனதில் பெரிய குழப்பமும் வேதனையும் உண்டாய்விட்டன. சற்றுநேரம் அவள் சகிக்க முடியாத வேதனையடைந்து பிறகு கஷ்டத்தோடு யாவும் உள்ளேயே யடக்கிக்கொண்டு,

“ஆ! நீ கூறுபவைகளெல்லாம் எனக்கு மிக்க ஆச்சரியமான சமாசாரங்களாயிருக்கின்றன” என்றாள்.

ஆன:—“மனோகரனுடைய சத்தியத்தையும், பெருந்தன்மையையும், யோக்கியதையையும் அறிந்திருந்தும் நீ யெப்படி யவன்மேல் ஐயங்கொண்டாயென்பதே எனக்குப் பெரிய வியப்பாயிருக்கிறது” என்றான்.

அம்பாலிகை யிம் மொழிகளைக்கேட்டு மிக்க மனோ வருத்தமடைந்து, “அய்யோ கடவுளே! இத்தகைய மொழிகளை யின்னும் கூறவேண்டாம். நீ மட்டும் என் காதலன் நிரபராதியென்று ருசுப்படுத்தி விட்டால் நான் அவருக்கு உண்டாகிய மனோ வருத்தத்திற்குப் பதில் என் பிராணனையே கொடுத்துவிடச் சித்தமாயிருக்கிறேன்” என்றாள்.

ஆன:—“நான் கடவுள் முன்னிலையில் கூறுகிறேன். கறுப்பண்ணனைப் போல் கல் நெஞ்சமும் அக்கிரமும் உடைய கொலைக்கஞ்சாப்பாதகனும் மனோகரனைப்போன்ற உத்தமகுணமும், சத்தியநெறியும், யோக்கியதையுமுடையவனும் வேறெங்குமிருக்க மாட்டார்கள் என்று சத்தியம் செய்கிறேன்” என்றான்.

அம்:—"நீ கூறுவதைப் பூரணமாய் நம்புகிறேன்" என்றான்.

ஆன:—"நீ என்னளவும் சந்தேகிக்காமல் என் வார்த்தைகளைப் பூரணமாய் நம்பலாம். கறுப்பண்ணன் மனோகரனுக்கு அகௌரவத்தையுண்டாக்கவும் அவன்மேல் அபாண்டமான கொலைக்குற்றத்தைச் சுமத்தவும் மிக்க சூதான அத்தாட்சிகளை யெல்லாம் இரக்கமின்றி ஏற்பாடு செய்து வைத்தான். இவ்வளவிற்கும் அக் குற்றத்தைச் செய்தவன் அவனே. அவனுடைய துஷ்டக்கூட்டாளியாகிய மலையாளத்தானே நீ சவம்போல் தோன்றக்கூடிய மூலிகையைக் கொடுத்தவன். கறுப்பண்ணன் தன் படுமோசச் செயல்கள் ஜெயமடைவதற்காக என்னை உடந்தை யாக்கிக்கொள்ள முயன்றான். ஆனால் அது கடவுள் தயவால் தடைப்பட்டு விட்டது. எவ்வாறெனின், துப்பறிபவர்களில் என்பெயர் கொண்டவன் இன்னொருவ னிருக்கிறான். அவன் உண்மையுள்ளவனல்ல. கொஞ்சம் பணம்மட்டும் கிடைப்பதாயின் எந்த அநீதச் செயலுக்கும் உடன்படுவான். கறுப்பண்ணன் நான்றான் அவனென்று நம்பிக்கொண்டு என்னை யழைத்துச் சென்றான். நான் சவப்பெட்டியருகில் நிற்கும்போது என் பின்னால் நின்ற இவன் துயரத்தை யடக்கமுடியாமல் அழத் தொடங்கினான். இவன் மிக்க கஷ்டத்தோடு இப்படிப் பாசாங்கு செய்கிறான் என்று என் மனதில் அப்போதே புலப்பட்டது. பிறகு இவன் மனோகரனை கொலை செய்தவனென்று பார்ப்போர்க்கு அய்யமின்றித் தோன்றக்கூடிய விதமாய் ருசுக்களைச் சோடித்து வைத்திருந்ததைப் பார்த்ததே இவன் மகா துஷ்டனாகிய கள்ளப்பயல் என்றும் இவனே இக் குற்றத்தைச் செய்தவனென்றும் எனக்குச் சந்தேகமின்றிப் புலப்பட்டுவிட்டது. நான் இவனுக்கு விரோதியாகவே திரும்பிவிட்டேன். அதன்பின் உன் காதலனைக் கொலைக்குற்றத்தினின்றும் காப்பாற்றினேன். அவன் கொன்றால் அது மனச்சாக்ஷிக்கு நியாயமாகவே தோன்றுமெனினும் சட்டப்படி கொலைக்குற்றமாகவே கருதப்படும்" என்றான்.

அம்பாலிகை "என் காதலர் யாரைக்கொலைசெய்ய முயன்றார்?" என்றாள்.

ஆனந்தவிங் "அச்சமயம் எவன் உன்னைக்கொன்றான் என்று மனோகரன் மனதிற்றோன்றியதோ அப்பாதகனையே" என்றான்.

அம்பாலிகை 'யாரவன்?' என்றாள். ஆனந்தவிங் 'கறுப்பண்ணன்றான்' என்றான். அச்சமயம் அவர்களுக்குப்பின்னால் எங்கோ புதரில் சலசலவென்று சத்தம் கேட்டது. ஆனந்தவிங் உடனே எழுந்துபோய்ப் பார்த்தான். ஒரு ஸ்திரீ ஒளிந்துகொண்டு போவது தெரிந்தது. அவன் அங்கிருந்து திரும்பிவந்ததும் "யாரோ நாம் பேசுவதை யொத்துக் கேட்டிருந்தார்கள்" என்றான்.

அம்:—"நான் அதைச் சட்டைசெய்யவில்லை" யென்றான்.

(தொடரும்) ஆரணி-குப்புசாமி முதலியார்.

அற்புத பாம்பு:—சிக்கந்தராபாத்தை அடுத்த ஒரு கிராமத்திலுள்ள ஒரு கோயிலில் சென்ற சுமார் ஒருமாதகாலமாக ஒரு பெரிய பாம்பு புகுந்து உண்ணாவிரதமிருந்து வருகிறதாம். சனங்கள் பால் முட்டை முதலிய வற்றை அதற்குப் பக்தியுடன் வைத்தும் அது ஏற்றுக்கொள்ள வில்லையாம். அந்தக் கோயிலிலுள்ள அம்மனே கோபத்தால் நாகவடிவெடுத்து வந்து பயமுறுத்துவதாகச் சிலர் சொல்லுகிறார்கள். இதற்காக இரவும் பகலும் பூஜை நடக்கிறது. சிலர் ஏழைகளுக்கு அன்னதானமுஞ் செய்கிறார்கள். (கலிகாலதீபம்.)

* * * * * *

1923, '24-வது ஆண்டின் விவசாய அறிக்கைப்படி இந்தியாவிலும் பர்மாவிலும் 1540 லட்சம் ஏக்கர் பூமிகள் தரிசாகக் கிடந்தன. சென்னை ராஜதானியில் மட்டும் சுமார் 12-லட்சம் பூமிகள் தரிசாய்க் கிடந்தன. இவ்வளவு பூமிகளிலும் பயிர் செய்திருந்தால் இந்தியாவின் பஞ்சம் குறைந்திருக்கும். (லோகோபகாரி.)

* * * * * *

இந்தியாவில் மகாத்மா காந்தி போன்ற மகான்கள் விரதத்திற்காக உண்ணாமலிருக்கிறார்கள். ஆனால் ஐரோப்பாவில் சிலர் வேடிக்கைக்காக உண்ணாவிரதமிருக்கத் தலைப்பட்டிருக்கிறார்கள். பெர்லினில் இரண்டுபேர் நாற்பத்தைந்து நாள் உண்ணாவிரதம் இருந்து உலகத்திலே உண்ணாவிரதம் இருப்பவர்களில் தலைமையாய் விட்டார்களாம். ஆனால் அவர்கள் உண்ணாவிரதம் இருந்தபோது 600-புட்டி மினரல் தண்ணீரும், பதினாயிரம் சுருட்டும் குடித்திருக்கிறார்களாம். (லோகோபகாரி.)

* * * * * *

கனவுபலித்தது:—ராம்ஸ்கேட் என்னுமிடத்தில்உள்ள பேகர் என்னும் மாலுமி ஒரு கப்பலை ஓட்டிச்சென்றார்; அப்போது ஓர் இரவு அவர் மனைவி உறங்கும்போது அவர் இறந்துவிட்டதாகக் கனவு கண்டாளாம். அதற்கேற்ப அவர் கப்பலிற்செல்லும்போது தவறிக்கடலில் வீழ்ந்துவிட்டனராம். அவரைக் காப்பாற்றச் சில படகுக்காரர்கள் முயன்றும் பயன் படவில்லையாம். அவர் உயிர்துறந்தனராம். அச்செய்தி அக்கப்பல் திரும்பி வந்தபோது அவர் மனைவிக்கறிவிக்கப்பட்டதாம். இதனால் கனவும் ஒரு சமயம் பலிக்கிறதென்பது விளங்குகிறது.—(இந்தியன் டெய்லி மெயில்.)

* * * * * *

அதிகவயதுள்ள மனிதன்:—கவுண்டிடவுன் டிரோமாரா என்னுமிடத்தில் வில்லியம்ஸ்மித் என்னும் ஒருவர் இருக்கிறார். இவருக்கு இப்பொழுது வயது 125 நடக்கிறது. இவருக்கு அத்தேச வழக்கப்படி இராஜாவால் 3 பவுன் பரிசளிக்கப்பட்டிருக்கிறது. இவர் இன்னும் தேகக்கட்டுடனும், மனோதிடத்துடனும் இருக்கிறார். தாமே உணவு சமைத்துண்கிறார். இதற்குக் காரணம் இவருடைய நல்லொழுக்கமேயாம். (இ-டே-மெ)

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

அக்ஷய(ளு) ஆனிமீ—கலியுகாதி 5028, சாலிவாகனம் 1849,
பசலி 1335-36—கோல்லமாண்டு 1101—ஹிஜரி 1344-45,
இங்கிலீஷ் 1926(ளு) ஜூன்மீ—ஜூலைமீ

| ஆனிமீ | ஜூன்மீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 15 | செவ் | பஞ்42-45 | ஆயி36-50 | சித்60 | கரிநாள் [க |
| 2 | 16 | புத | சஷ்48-40 | மக44-23 | சி44-23அ | சஷ்டி,விவாகம்,கதிரறுக் |
| 3 | 17 | வியா | சப்54-33 | பூரம்51-45 | சி51-45ம | வியாதியஸ்தர் குளிக்க |
| 4 | 18 | வெ | அ59-48 | உத்58-28 | சி58-28அ | ஆனித்திருமஞ்சனம் |
| 5 | 19 | சனி | நவ60 | அஸ்60 | மர60 | திருதினஸபிருக் |
| 6 | 20 | ஞா | நவ3-35 | அஸ்3-58 | அ3-58சி | கரிநாள் |
| 7 | 21 | திங | தச5-55 | சித்7-53 | பிர7-53அ | தசஹார விரதம் |
| 8 | 22 | செவ் | ஏ6-25 | சுவா10-5 | சி10-5மர | கடகாயனம் 10-33 |
| 9 | 23 | புத | து5-10 | விசா10-33 | சித்60 | பிரதோஷம், அவமாகம் |
| 10 | 24 | வியா | திர2-10<br>சது57-45 | அனு9-15 | சித்9-15பி | அவமாகம் |
| 11 | 25 | வெ | ○52-18 | கேட்6 35 | ம6-35அ | பௌர்ணமி, ரிஷபபூஜை |
| 12 | 26 | சனி | பிர45-40 | மூலம்2-43<br>பூரா58-3 | சித்60 | |
| 13 | 27 | ஞா | து38-33 | உத்52-50 | அமி60 | |
| 14 | 28 | திங் | திரி31-10 | திரு47-25 | அ47-25சி | |
| 15 | 29 | செவ் | சது23-43 | அவி42-8 | சி42-8மர | |
| 16 | 30 | புத | பஞ்16-43 | சதை37-15 | சி37-15அ | |
| 17 | 1 | வியா | சஷ்10-13 | பூரட்33-0 | சித்60 | |
| 18 | 2 | வெ | சப்4-25<br>அ59-38 | உத்29-35 | சி29-35அ | |
| 19 | 3 | சனி | நவ55-45 | ரேவ27-10 | ம27-10சி | |
| 20 | 4 | ஞா | தச53-0 | அஸ்25-45 | சித்60 | பும்சவனம், நிஷேகம் |
| 21 | 5 | திங் | ஏ51-25 | பர✲25-33 | சி25-33ம | மூலிகைஉபயோகிக்க, அடுப்புவைக்க,கிருத்திகை |
| 22 | 6 | செ | து51-5 | கிரு26-25 | சி26-25அ | கூர்மஜயந்தி, கடன் நீக்க |
| 23 | 7 | புத | திர51-53 | ரோ28-33 | சித்60 | பிரதோஷம் சீமந்தம் |
| 24 | 8 | வியா | சது53-53 | மிரு31-45 | மர60 | மாச சிவராத்திரி |
| 25 | 9 | வெ | ●56-50 | திரு36-5 | சித்60 | சர்வத்ர அமாவாசை |
| 26 | 10 | சனி | பிர60 | புன41-30 | சித்60 | ஆஷாடசுத்தம் |
| 27 | 11 | ஞா | பிர1-10 | பூச47-50 | சித்60 | சந்திரதெரிசனம் |
| 28 | 12 | திங் | துதி6-5 | ஆயி54-53 | சி54-53ம | நவக்கிரகசாந்திசெய்ய |
| 29 | 13 | செவ் | திரி11-55 | மக60 | சித்60 | மாசசதுர்த்தி விரதம் |
| 30 | 14 | புத | சது18-0 | மக2-25 | சித்2-25அ | சித்திரம் எழுத |
| 31 | 15 | வியா | பஞ்24-10 | பூர10-3 | சித்10-3ம | கடகரவி நா-58-20, மாடு வாங்க,சஷ்டி உபவாசம் |

1926ஸ்ரீ ஜூலைமீ

| | | | |
|---|---|---|---|
| செ | சுக் | | ஞா-பு ராகு |
| குரு | 8உ ரிஷ-சுக்<br>10,, கட-புத | | |
| கே | | சனி | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR AT THE "ANANDA BODHINI" POWER PRESS, 15, VENKATESA MAISTRY ST., MADRAS